# வெள்ளியங்கிரிச் சிற்றிலக்கியத் திரட்டு



சிரவையாதீனம்
தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

# வெள்ளியங்கிரிச் சிற்றிலக்கியத் திரட்டு

நூலாசிரியர்
சிரவையாதீனம்
**தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்**

குறிப்புரையாசிரியர்
சிரவையாதீனக் கவிஞர்
**புலவர். ப.வெ. நாகராஜன்,** பி.லிட்., விஷாரத்

வெளியீடு
**இராமானந்த அடிகளார் பவுண்டேசன்**
குமரகுரு பொறியியல் கல்லூரி
கோயமுத்தூர் - 641 006

முதற்பதிப்பு

ஏப்ரல் ௨௲௨

விலை ரூ. 50/-

வெளியீடு

**இராமானந்த அடிகளார் பவுண்டேசன்**
*குமரகுரு பொறியியல் கல்லூரி*
*கோயமுத்தூர் - 641 006.*

அச்சிட்டோர்

***ருக்மணி ஆப்செட் பிரஸ்***
*732, அவினாசி ரோடு*
*கோயமுத்தூர் - 641 018.*
*✆ 216721, 211006*

# ஆசியுரை

சிரவையாதீனக் குருபீடத்தை இரண்டாவது மகா சந்நிதானமாக விற்றிருந்து அலங்கரித்தவர் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் அவர்கள். செந்தமிழ்ப் பெருங்கவிஞராக விளங்கிய இச்சுவாமிகள் ஏறத்தாழ 15,000 பாக்களை இயற்றி அளித்துள்ளார்கள். ஐம்பதுக்கு மேற்பட்ட திருத்தலங்களுக்கு அவர் இலக்கியம் படைத்துள்ளார். தமிழறிஞர்கள் இச்சுவாமிகளைக் கொங்குநாட்டுக் கச்சியப்ப முனிவர் எனப் போற்றுகின்றனர். இத்தகைய பெருமைமிக்க எம் பரமகுருநாதரால் இயற்றப்பெற்ற **வெள்ளியங்கிரிச் சிற்றிலக்கியங்கள்** இங்கு உரையுடன் பதிக்கப்பெறுகின்றன.

விநாயகர் பதிகம், வெள்ளிக்கிரியான் பதிகம், சத்திநாயக மாலை, பஞ்சகிரித் திருப்புகழ் ஆகிய பிரபந்தங்கள் இப்பதிப்பில் உரையோடு இடம்பெற்றுள்ளன. இவையாவும் மூலம் மட்டுமாக 1938இல் வெளியிடப்பட்டன. இவற்றோடு அண்மையில் கிடைத்த வெள்ளி வெற்புச் சிலேடை வெண்பா என்னும் பிரபந்தமும் உரையுடன் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. இவையாவும் இறையடியார்களுக்கும் இலக்கியச் சுவைஞர்களுக்கும் இன்பம் அளிக்கும் என்பது உறுதி.

இந்தச் சிற்றிலக்கியத் திரட்டைக் குறிப்பு உரையோடு பதிப்பித்துள்ளனர் பாராட்டிற்குரிய நம் ஆதினக் கவிஞர், புலவர் திரு.ப.வெ. நாகராஜன் ஆவார்கள். இவர் முன்பே பற்பல இலக்கண இலக்கியங்களைப் பதிப்பித்துப் புகழ் பெற்றவர். இவருடைய பதிப்புகளுக்குத் தமிழ் இலக்கிய ஆய்வாளர்களிடையே பெரிய மதிப்பு நிலவுகிறது. தாத்தா சுவாமிகள், தவத்திரு கந்தசாமி சுவாமிகள் ஆகியோரின் பல நூல்கள் இவரால் பதிப்பிக்கப் பட்டுள்ளன. எம் குருநாதருடைய பேரன்புக்குப் பாத்திரரானவரும் நம் கௌமார மடாலயத்தோடு நெடுநாட்களாகத் தொடர்புடையவரும் ஆகிய புலவர் சிரவை ஆதீனக் கவிஞர் திரு. ப.வெ. நாகராஜன் அவர்கள் இதனைச் சிறப்பான குறிப்புரையுடன் பதிப்பித் தளித்தமைக்குப் பாராட்டுக்களும் நல் வாழ்த்துக்களும்.

வெள்ளியங்கிரிச் சிற்றிலக்கியத் திரட்டு எனும் இந்நூல். அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களின் எண்பதாம்

அகவையையொட்டி இராமானந்த அடிகளார் பவுண்டேசன் வெளியிடுவது மிகப் பொருத்தமாகும்.

ஆயிரம் பிறை காணவுள்ள அருட்செல்வர் அவர்கள் மடத்தின் வளர்ச்சியிலும், சுவாமிகளின் நூல்கள் அனைத்தும் வெளியிடப்பட வேண்டும் என்பதிலும் ஆர்வம் மிக்க பெருந்தகை. அவர்கட்கு எம் நல்வாழ்த்துக்கள். இதனை அழகுற அச்சிட்டுள்ள ருக்மணி ஆப்செட் அச்சகத்தார்க்கு எம் பாராட்டுக்கள்.

*வெள்ளி மலைவடிவில் வீற்றிருந்த அன்பர்தம்*
*கள்ள மலப்பகையின் கட்டறுக்கும் - வள்ளலைத்தன்*
*பாத்திறத்தால் போற்றெம் பரமகுரு நாதர்தரும்*
*தோத்திரத்தால் தோன்றும் சுகம்.*

**தவத்திரு குமரகுருபர சுவாமிகள்,**
சிரவையாதீனகர்த்தர்,
கௌமாரமடாலயம்.

அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ்ஜோதி!
தனிப்பெருங்கருணை! அருட்பெருஞ்ஜோதி!

# முன்னுரை

வெள்ளியங்கிரி, தவஞானியர்களைக் கவர்ந்திழுக்கும் தன்மையை உடையது; சிவகிரி எனப் போற்றப்படுவது. அங்குச் சந்திநாயகனான வெள்ளி மலையானிடத்து ஆராக் காதல் கொண்டவர் நூலாசிரியர் கந்தசாமி சுவாமிகள்.

எனது மைத்துனர் சுப்ரமணியம் என்ற ராஜுக் கவுண்டர் அடிக்கடி வெள்ளியங்கிரி மலைக்குப் போவார். எங்கள் குடும்பத்தில் அவர்தான் வெள்ளியங்கிரியில் எழுந்தருளியுள்ள வெள்ளியங்கிரி ஆண்டவரிடம் மிகுந்த பக்தி உடையவர். அவர் தம்பி பெயர் வெள்ளியங்கிரி.

ஆண்டுதோறும் சித்ரா பௌர்ணமிக்கு அவர் அங்குச் சென்று வழிபாடு செய்து திரும்புவார். செங்குத்தாகவும் உயரமாகவும் உள்ள வெள்ளியங்கிரி மலைக்கும் ஒரு சில முறை சென்றுள்ளார். ஆனால் நான் அந்த மலைச் சிகரத்திற்கு ஒருமுறை கூட போனதில்லை. மலையடிவாரம் வரைதான் போயுள்ளேன். சிறுவயதில் அங்கு போகவில்லை.

அதற்காகவே மலை ஏறுகிறவர்கள் கைத் தடிகளை எடுத்துக் கொண்டு செல்கிறார்கள். மலையடிவாரத்திலேயே கைத்தடிகள் விநியோகிக்கப்படுகின்றன. இந்தக் கைத்தடிகள் இறங்கும்போது மிகவும் அவசியம். இல்லையென்றால், இடறித் தலைகுப்புற விழ நேரிடும். கைத்தடிகளை ஊன்றித் தற்காத்துக் கொள்ளலாம்.

வெள்ளக்கிணர் வெள்ளியங்கிரி கவுண்டர் அவர்கள் வெள்ளியங்கிரி ஆண்டவரிடம் மிகுந்த பக்தியுடையவர். அவர் சில நற்காரியங்களை மலையடிவாரத்தில் செய்துள்ளார்.

சமீப காலமாக வெள்ளியங்கிரி மலை பிரபலமடைந்து வருகிறது. நகரவாசிகள் பலரும் சித்ரா பௌர்ணமிக்கு முன்பும் பின்பும் மலையேறிச் சென்று வெள்ளியங்கிரி ஆண்டவரைத் தரிசிப்பதை ஒரு விரதமாக ஏற்றுச் செய்து வருகிறார்கள். வெளியூர்களிலிருந்தும் சில பக்தர்கள் இம்மலைக்கு வருகின்றனர். வயதானவர்கள் யாரும் மலையேற முடியாது.

ஏழாவது மலைக்குச் செல்லுகிற போது எல்லோரும் வெள்ளியங்கிரி மலைக்குச் சென்று திரும்ப வேண்டுமானால் படிகளை முறையாக அமைக்க வேண்டும். அப்போதுதான் பக்தர்கள் வெள்ளியங்கிரி மலைக்கு எளிதாகச் சென்று வழிபட்டுத் திரும்ப முடியும். இந்த வசதியைச் செய்வதன் மூலம் தென் கயிலாயமாக விளங்கும் வெள்ளியங்கிரி மலை ஒரு சிறந்த சிவ ஸ்தலமாகப் புகழ்பெறும். கார் போகும்படி அமைக்கக் கூடாது.

மலை அடிவாரப் பகுதியில் அமைந்துள்ள இந்தக் கோயிலையும் இயற்கை அழகோடு அமைந்துள்ளது. தண்ணீர் வசதியும் நிறைந்துள்ளது. மலைக்குச் சென்று திரும்புவதற்குப் படிக்கட்டு வசதிதான் இப்போது தேவை.

எதிர்காலத்தில் இந்த அரிய திட்டத்தை அமைத்து நிறைவேற்ற பக்தர்களும் ஆவன முயற்சி செய்ய வேண்டும்.

வெள்ளியங்கிரியைப் பற்றிச் சுவாமிகள் பாடியுள்ள ஆறு நூல்களின் தொகுப்பே, வெள்ளியங்கிரித் திரட்டு எனும் இந்நூல். இந்நூலில் உள்ள பாடல்களுக்குச் சிரவை ஆதீனக் கவிஞர், புலவர் திரு.ப.வெ. நாகராஜன் அவர்கள் குறிப்புரை எழுதியதோடு பதிப்பாசிரியராகவும் பணிபுரிந்துள்ளார். அவர்க்கு நம் பாராட்டுக்கள்.

சிரவணபுரம் கௌமார மடாலயம் (சிரவை ஆதீனம்) தவத்திரு இராமானந்த அடிகளார் அவர்களால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் நிறுவப்பட்டது. இரண்டாவது பட்டமாக விளங்கியவர் தவத்திரு கந்தசாமி சுவாமிகள்.

இவர்கள் பாடிய பாடல்கள் எண்ணில. அவைகளுள் இன்றளவும் கிடைத்தவை 14481 என்பது அவரின் வரலாற்று நூலின் வழியாக அறிகிறோம்.

குன்றுதோறாடும் குமரனை வழிபடு தெய்வமாகக் கொண்டது கௌமாரம். என்றாலும் கௌமார மடத்தின் நிறுவனர் முதல் எல்லாருமே பிற சமயங்களை வெறுக்காத, பொதுமை நோக்கினர் என்பதற்கு அங்கு நடைபெற்றுவரும் அறுசமயக் கடவுளர் வழிபாடே சான்றாய் அமையும்.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் சமய வேறுபாடு இன்றி அறுசமயக் கடவுளர்களையும் போற்றிப் புகழ்ந்து நூல்கள் எழுதி

உள்ளார். அவரின் பக்த மான்மியம் சைவ அடியார்களின் மகிமையைக் கூறும் நூல், சந்திரதத்தர் என்பவர் வடமொழியில் எழுதிய பக்தமாலா என்ற நூலை சுவாமிகள் தமிழில் 7375 பாடல்களைக் கொண்ட பக்த மான்மியமாக எழுதியுள்ளார். இது அவரின் பெருமை நோக்கினைப் புலப்படுத்தும் உயர்முடியாகும். இவர் பெருமைகள் பாடிய நூல்கள் அல்லாமல், பல தலங்களைப் பற்றியும் பாடிய நூல்கள் ஐம்பது ஆகும். அவற்றுள் ஒன்றுக்கும் மேற்பட்ட நூல்களைப் பெற்றவை 38 என்பதும், தல தொடர்பான பாடல்கள் 6845 என்பதும் ஆதீனம் வெளியிட்டுள்ள தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் வரலாற்று நூலில் இருந்து அறியப்படும் செய்தி.

சுவாமிகளின் நூல்களில் சில இன்னும் அச்சேறாமல் உள்ளன; அச்சேறியவற்றிலும் பல இப்போது கிடைப்பது இல்லை. இந்தக் குறையைப் போக்க சிரவையாதீனம் நான்காம் பட்டம், தவத்திரு குமரகுருபர சுவாமிகள் முயற்சி மேற்கொண்டு வருகின்றார்கள். அவர்களின் முயற்சி நன் முயற்சியாகும். அவரின் இம் முயற்சிக்கு எல்லோரும் உதவுவார்களாக.

இந்தத் திரட்டினை இவ்வளவு அழகுற அமைத்துத் தந்த குமரன் ஆப்செட் அச்சகத்தில் பணிபுரியும் எல்லாருக்கும் எம் பாராட்டும் வாழ்த்தும்.

( நா. மகாலிங்கம் )
தலைவர்
இராமலிங்கர் பணிமன்றம்

சென்னை
1.4.2002

# உரையாசிரியரின் விளக்கம்

*நீர்ஊறும் கயல்ஊரும் அதில்ஊரும்*
*வெண்தரளம் நிறைச்சங் கூரத்*
*தேர்ஊறும் மணிமறுகின் அமுதூறத்*
*தமிழ்ஊற, தென்றல் ஊரும்*
*பேரூர்மன் றினில்அரசம் பலத்தாடும்*
*பதத்தான்மெய்ப் பிரிவாய் என்றும்*
*சீர்ஊரும் **இரசதப்பொற் சிகரம்** வினை*
*தகரமிகச் சிந்தை செய்வாம்.*

*– பட்டிப் புராணம்*

கொங்குநாட்டுக் கச்சியப்ப முனிவர் எனப் போற்றப்பெறும் சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகளால் இயற்றப்பெற்ற வெள்ளியங்கிரிச் சிற்றிலக்கியத் திரட்டு என்னும் இந்நூலுக்கு உரை எழுதி பதிப்பிக்க எனக்குக்கிடைத்த பேறு பெரும் பேறாகும்.

வெள்ளியங்கிரி கொங்கு மண்டலத்தின் மேற்கு எல்லை ஆகும்.

வடக்குப் பெரும்பாலை; வைகாவூர் தெற்கு,
குடக்குப் பொறுப்பு வெள்ளிக்குன்று (பொறுப்பு - எல்லை).

என்பது பழம்பாடல். இந்த மலையின் பெருமை திருப்பேரூர்ப் புராணத்தில் பரவலாகப் பேசப்படுகிறது. சிவபெருமானே மலை வடிவத்தில் எழுந்தருளியிருப்பதாகத் தலவரலாறு. கயிலைக்கு இணையான மகத்துவம் மிக்கதாகலின் இது தென்கயிலை எனப் போற்றப்பெறும். கங்கை நதியின் அமிசமாகக் கருதப் பெறும் நொய்யலாறு என்னும் காஞ்சிமாநதி அம்மலையில்தான் தோன்றுகிறது.

இத்தகைய சமயச் சிறப்புவாய்ந்த புனிதமலையைப் போற்றிச் சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் விநாயகர் பதிகம், வெள்ளியங்கிரிப் பதிகம், தென்கயிலைச் சத்திநாயக மாலை, பஞ்ச கிரித் திருப்புகழ் ஆகிய தோத்திர இலக்கியங்களை யாத்தளித்துள்ளார். இவையாவும் 1938ஆம் ஆண்டு சிரவைக்

கௌமார சபை வெளியீடாக வெளியிடப்பட்டுள்ளது. வெறும் மூலம் மட்டுமாக அமைந்த இவை அன்றைய வழக்கப்படி சந்தி பிரிக்காமல் பதிப்பிக்கப் பட்டுள்ளன. இப்பதிப்பில் பண்டித அ. கந்தசாமிப் பிள்ளையவர்களின் முன்னுரையோடு பதினெழுவர் இயற்றிய 58 செய்யுள்கள் இடம் பெற்றுள்ளன. இதனால் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்பால் அந்நாளைய புலவர் பெருமக்கள் கொண்டிருந்த பெருமதிப்பை உணர முடிகிறது.

தவத்திரு. கந்தசாமி சுவாமிகளால் இயற்றப் பெற்றுள்ள அனைத்து நூல்களைப் பற்றியும் அறிந்து முழுமையாகப் பட்டியல் இடுவதற்காக 1998ஆம் ஆண்டு அவருடைய கையெழுத்துப் படிகளை எல்லாம் தேடித் தொகுத்து ஆராய்ந்த போது வெள்ளியங்கிரியைப் பற்றிய 30 சிலேடை வெண்பாக்கள் கிடைத்தன. ஐந்து பாடல்களாலான ஒரு பஞ்சகத்தை இயற்றினாலும் தனியாக ஒரு காப்புச் செய்யுளைப் படைப்பது நம் சுவாமிகளின் வழக்கம். இது வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளிடமிருந்து பெறப்பெற்ற மரபு எனலாம். அத்தகைய சுவாமிகள் சித்திரத்தன்மைமிக்க பிரபந்தம் ஒன்றைத் தொடங்கும் போது காப்புச் செய்யுள் பாடாமலிருந்திருக்க மாட்டார். மேலும் வெண்பாமாலை முற்றுப்பெற்றுவிட்டதாகவும் தெரியவில்லை. எனவே வேறு ஏதாவதோர் இடத்தில் காப்புச் செய்யுளோடு கூடிய வெள்ளியங்கிரி வெண்பாமாலையின் சுத்தமான கையெழுத்துப்படி இருக்கலாம் என நம்புகிறேன். முதல் இரு வெண்பாக்களைத் தவிர மற்ற பாக்கள் அனைத்திலும் தலப்பெயர் வெள்ளிவெற்பு என்றே குறிக்கப் பெற்றிருத்தலின் ''வெள்ளிவெற்புச் சிலேடை வெண்பா'' எனத் தலைப்பளித்துள்ளேன். இந்த நூல் 1938ஆம் வருடத்துப் பிரபந்தத் திரட்டுப் பதிப்பில் இடம்பெறாததால் அதற்குப் பிறகே இயற்றப்பெற்றிருக்கும் என்பது உறுதி.

இனி நூல்களைப் பற்றித் தனித்தனியே காண்போம்.

## 1. விநாயகமூர்த்தி பதிகம்

இப்பதிகம் வெள்ளியங்கிரி அடிவாரத்தில் திருக்கோவில் கொண்டு விளங்கும் மூத்த பிள்ளையாரைத் துதிப்பது ஆகும். இதனை, ''வெள்ளிவெற்பு அடிக்கண்வாழ் விக்கினேச்சுரனே'' என்னும் மகுடத்தால் அறியலாம். காப்பினும் தெளிவாக, ''வெள்ளிக் கிரி அடிவாழ் வேழமுகற்கு ஓர் பதிகம்'' என்கிறார்.

இப்பதிகத்தில் இடம்பெற்றுள்ள கற்பனை ஒன்று இலக்கியச்சுவை மிக்கது. வெள்ளிமலை மேகங்கள் தவழுமாறு வானளாவ உயர்ந்துள்ளது. அதன்மேல் திரியும் யானை துதிக்கையை உயர்த்தினால் திங்களைத் தீண்டி விடலாம் போல இருக்கிறது. வானத்தில் முழு நிலவு ஒளி வீசுகிறது. இதனைக் கண்ட யானை ஒன்று மதியைத் தேவர்கள் உண்ணும் அமுதத்தின் கவளம் என மயங்கித் தும்பிக்கையை நீட்டிப் பிடிக்கிறது. அதனால் திங்கள் திடுக்கிடுகிறது. சுவையான காட்சி அல்லவா?

''மதுமழைப் பொழில் குஞ்சரம் அமுதர்
வழங்க லானக வளம் கொல்என்று உவந்து
விதுவி திர்ப்புறப் பற்றுயர் வெள்ளிவெற்பு'' (10)

என்பன பாடலடிகள்.

சிவபெருமானின் வடிவமாகிய வெள்ளிமலையின் அடிவாரத்தில் விநாயகர் அமர்ந்திருப்பது தந்தையின் மடியில் தனயன் வீற்றிருப்பதைப் போல உள்ளது என நூற்பயன்பாவில் நுதலிச் செல்கிறார்.

பொதுவாகவே தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் பாடல்கள் நிலையாமையை வலியுறுத்தி வைராக்கியத்தை வளர்ப்பனவாக இருக்கும். இத்தன்மை இந்தப் பதிகத்திலும் காணக் கிடைக்கிறது.

## 2. வெள்ளிக்கிரியான் பதிகம்

வெள்ளிக் கிரியானே என்றும் மகுடம் பெற்றுத் துலங்கும் இப்பதிகத்தின் குறிஞ்சி வருணனை குறிப்பிடத் தக்கது. வெள்ளியங்கிரியின் மரங்களில் இரவில் மலர்ந்து மணம் பரப்பும் வெள்ளைமலர்கள் விண் மீன்களைப் போலத் தோன்றி வியப்பளிக்கிறது. (2) மலையில் பலவகையான பறவைக் கூட்டங்கள் இசைக்கின்றன. இதுபற்பல துறைகளை உடைய வேதங்கள் பல முகங்களை ஏற்று ஒலிப்பதைப் போல உள்ளது (5) தவசிகளின் உள்ளம் ஒளிமயமானது; அப்படியே வெள்ளி வெற்பும் இரவும்பகலும் இருட்டே இல்லாமல் பிரகாசிக்கிறது (8).

கௌமாரத்தின் உயிர்க்கொள்கையாகிய கொலைபுலை தவிர்த்தல், ''புல் உண்டிடும் ஆ இனத்து ஊன்நுகர்வோர் புன்மைக் குணம்'' (8), ''காதும் தொழில் ஆர் காது உந்திய மைக்கண்ணார் உதரத்தில் போதும் தொழில் தீர்த்து'' (9) என இப்பதிகத்தில் இரண்டு இடங்களில் கூறப்பட்டுள்ளது.

### 3. சத்தி நாயக மாலை

பிற்காலத்தெழுந்த மிகப்பல ஆசிரியவிருத்த மாலைகளைப் போல இதுவும் நூறு எழுசீர் விருத்தங்களால் யாக்கப்பெற்றுள்ளது. தென்கயிலை வித்தகா! சத்தி நாயகனே என்றும் மகுடம் பெற்று நடக்கிறது. செய்யுளின் முற்பாதி வேண்டுகோளாகவும் பிற்பாதி இறைவன் மற்றும் தலத்தின் பெருமையாகவும் அமைந்துள்ளது. மலையே இறைவன் திருமேனி என்பது பல பாடல்களில் உணர்த்தப் பெறுகிறது.

வெள்ளிவெற்பு இறைவனின் திருமேனி. கீழே பன்றிகள் நிலத்தைத் துளைக்கின்றன. வானளாவிய சிகரத்தில் படியும் சந்திரன் அன்னப் பறவையைப் போல் தோன்றிப் பிரமனை நினைவுறுத்துகிறது. மொத்தமாக இது மாலும் அயனும் அடி முடி தேடியதைப் போல உள்ளது என்கிறார். (3) இது திருப்பேரூர்ப் புராணக் கருத்தை அடியொற்றிய பாடல். மலையில் விளைந்த மூங்கிலின் நுனி சூரியனின் தேர்க்குதிரைகளை விரட்டுகின்றன. இதனால் அத்தேரின் பாகனாகிய அருணனுக்கு வேலைப்பளு குறைகிறது எனக்கூறி மலையின் உயரத்தை உணர்த்துகிறார் (6).

வெள்ளிவெற்பில் வேழங்கள் மிகுதி என்பதனைக் கூறவந்தவர் மேகக்கூட்டங்களும் அஞ்சும்படி பிளிறிக் கொண்டு திரியும் யானைகள் பொழிகின்ற மும்மதங்கள் வெள்ளமாகப் பரந்து பெருமரங்களின் வேரடிமண்ணைக் கரைத்து அந்த மரங்களை சாயச் செய்கின்றன என்கிறார் (13).

''நாள் என ஒன்று போற்காட்டி உயிர்ஈரும் வாள்அ துணர்வார்ப் பெறின்'' என்னும் குறள் இவர் வாக்கில்'' நாள் என வரும் ஒவ்வொன்றும்மெய் உயிரின் நண்ணிய வேர் அறுத் தொழிக்கும் வாள் எனக் கருதிக் கூற்றுயிர் கொளும்நின் மலர்ப்பதம் தொழமறந் துழன்றேன்'' (43) என முழுமையாக எதிரொலிக்கிறது. தேவரீர் ஒளிமயமாக இருக்கிறீர்கள் என்பதற்காகத் தங்களைச் சோதி எனப்பெயர்ச் சொல்லாகக் கூறித் துதித்தேன். தேவரீர் அப்பெயர்ச் சொல்லை ஏவல்வினையாகக் கொண்டு அடியேனைச் சோதிக்க வேண்டாம் என்பது சமத்காரமானதோர் சொல்விளையாட்டு (67).

### 4. வெள்ளிவெற்புச் சிலேடை வெண்பா

30 நேரிசை வெண்பாக்களாலாகிய இந்த மாலை இதுவரை வெளியிடப்படாதது ஆகும். இவை 1998 ஆம் ஆண்டு தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் கையெழுத்துப் படிகள் எல்லாவற்றையும்

ஆராய்ந்தபோது புதிதாகக் கிடைத்தன. இதில் காப்புச் செய்யுள் காணப்படாததாலும், நூல் நிறைவு பெற்றதாகத் தெரியவில்லை யாதலாலும், கிடைத்துள்ள பிரதி சுத்தப்பிரதியாக இல்லாததாலும் வேறு ஒரு கையெழுத்துப்படி முழுமையானதாக இருக்க வேண்டும் என நம்புகிறேன். எப்படி இருந்தாலும் கிடைத் தவற்றைப் பாதுகாப்பதற்காக இங்கே வெளியிடப்படுகிறது.

இந்தச் சிலேடை வெண்பா வழக்கமான பிற சிலேடை வெண்பாக்களை விட அமைப்பில் வேறுபட்டதாகும். பொதுவாகச் சிலேடை வெண்பாமாலைப் பாடல்களில் முதல்பாதியில் இருபொருள்களுக்கும் சிலேடையும் ஊர்ப் பெயரும் அமைந்து அடுத்த மடக்குப் பகுதியில் பாட்டுடைத் தலைவன் அல்லது தவச் சிறப்பு இடம் பெற்றிருக்கும். காட்டாக,

தண்ணார் பொழிச் சுரும்பும் தத்தைமொழியார்கதுப்பும்
கண்ணாடி வீழும் கலைசையே - ஒண்ணாறும்
வான்முத் தலைவேலை மைக்கடுவுண்டோன் கரத்தில்
வான்முத் தலைவேலை வாழ்வு.

(கலைசைச் சிலேடை வெண்பா)

என்பதை நோக்கலாம். இந்த உரையாசிரியர் அறிந்தவரை எல்லாச் சிலேடை வெண்பாக்களும் இந்த அமைப்பில் தான் உள்ளன.

ஆனால் இந்த வெள்ளிவெற்புச் சிலேடை வெண்பா வித்தியாசமானது. செய்யுளின் முற்பகுதியில் வெள்ளி வெற்புக்கு வேறொரு பொருள் சிலேடைவகையால் இணையாக்கப்படுகிறது. அதாவது கிடைத்தவரையில் 30 பொருள்களுடன் வெள்ளியங்கிரி சிலேடிக்கப்பட்டுள்ளது. காப்பியங்களிலும், புராணங்களிலும் நாட்டுநகரப் படலங்களிலும் மலை, யாறு, கோட்டை போன்றவற்றைச் சிலேடையணியோடு புனைந்து கூறுதல் மரபு. அந்தக் காப்பிய மரபைச் சிலேடைமாலை ஆகிய சிற்றிலக்கியத்தில் பிரயோகிக்கும் ஒரு பரிசோதனையாக இந்த வெள்ளிவெற்புச் சிலேடை வெண்பா அமைந்துள்ளது எனலாம். வெண்பாக்களின் மூன்று நான்காம் அடிகளாகிய மடக்குப் பகுதியில் மாற்றம் இல்லை. தமிழ்ச் சிற்றிலக்கிய உலகில் இது ஒரு புதிய வகை ஆகும்.

இந்தச் சிலேடை வெண்பா தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் சொல்லணி ஆக்கத்திற்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

## 5. பஞ்சகிரித் திருப்புகழ்

வெள்ளியங்கிரி (சிவகிரி), சத்திகிரி, மருதமலை (முருகன்மலை), விட்டுணுகிரி (பெருமாள் மலை), பிரம கிரி ஆகிய ஐந்து மலைகளைப் போற்றும் ஐந்து திருப்புகழ்ப் பாக்களால் ஆண பிரபந்தம் இது. நூலுக்குப்புறம்பாகக் காப்புவெண்பா ஒன்றும் இடம் பெற்றுள்ளது.

வண்ணக் குறிப்புக் கொண்டு எட்டுக் கலைகளால் இயன்ற பாவகை தமிழில் திருப்புகழ் எனப்படுகிறது. இந்த நூலாசிரிய சுவாமிகள் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளின் மரபில் வந்துள்ளதற்கேற்ப ஏராளமான வண்ண விருத்தங்களையும், திருப்புகழ்ப் பாக்களையும், சில வகுப்பு மற்றும் வண்ணங்களையும் இயற்றியுள்ளார். இவரால் இயற்றப் பெற்றுள்ள திருப்புகழ்ப் பாக்கள் அனைத்தையும் தொகுத்து ஒரே நூலாக வெளியிட்டால் மிக்க பலனுடையதாகும்.

இப்பிரபந்தத்தில் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய கௌமாரக் கொள்கை ஒன்று உண்டு. ஒருவருக்கு அவருடைய ஞானதேசிகனுடைய பெயரும் வடிவமுமே பரம்பொருளின் நாமரூபம் ஆகும் என்பதும், ஒரே கடவுளாகிய அந்தப் பரம்பொருளே அறுசமயக் கடவுள்களே அன்றி எல்லாத் தெய்வங்களாகவும் தோன்றுகின்றன என்பதும் கௌமாரத்தின் முன்மையான தத்துவம் ஆகும். தத்துவநிலையில் குரு பரத்துவத்தையும் வாழ்வியல் நிலையில் கொல்லாமையையும் மிக அழுத்தமாக வலியுறுத்துவதே கௌமார நெறி. அவ்வகையில் இப்பஞ்சகத்தில் குருபரத்துவம் கூறப்பட்டுள்ளதைக் காண்போம்.

இத்தோத்திரத்தில் சிவபெருமான், சக்தி, முருகப் பெருமான், திருமால், பிரமன் ஆகிய ஐந்து தெய்வ வடிவங்கள் ஒவ்வொரு திருப்புகழ்ப் பாவால் போற்றப் பெறுகின்றன. ஒவ்வொன்றிலும் ஏழாம் கலையில் அந்த மூர்த்தமே தம்முடைய குருநாதர் ஆவார் எனக் கூறுகிறார்.

தமக்குக் காம நோய் ஏற்படாதவாறு காக்கின்ற குருநாதராகச் சிவபெருமானும் (1), அகந்தை மிக்கவர்களின் கூட்டுறவிலிருந்து பிரித்துத் தம்மை ஆட்கொண்டு, கருணைபுரியும் தேசிகனாகப் பராசக்தியும் (2), அறிவுத் தெளிவற்று மயங்கி உழலும் தன்னைத் தெளிவித்துச் சிறந்த கௌமாரர் கூட்டத்தில் இடம்பெறச் செய்த ஆசானாக முருகப் பெருமானும் (3), தான் உலகியல் விஷய

சுகங்களில் சிக்காதவாறு பேரின்பத்தை வழங்கும் குருவாகத் திருமாலும் (4), அடிப்டைத் தகுதிகள் எதுவும் இல்லாத தனக்கும் மெய்ஞ்ஞானம் பெற உதவிய குருவாகப் பிரமனும் (5). இப்பிரபந்தத்தில் போற்றப்பட்டுள்ளனர். அடுத்துள்ள தனித்திருப்புகழ்ப் பாக்களிலும் இதே தன்மையைக் காணலாம். எட்டுப் பாடல்களிலும் இந்தக் கவுமாரக் கருத்து ஏழாம் கலையிலேயே இடம்பெற்றுள்ளது என்பது கவனிக்கத்தக்கது.

## 6. தனித் திருப்புகழ்கள்

இந்நூலாசிரிய சுவாமிகள் பெரும்பாலும் தாம் இயற்றும் ஒவ்வொரு பதிகத்தையும் அடுத்து ஒரு திருப்புகழ் பாடும் இயல்புடையவர். அவ்வகையில் வெள்ளியங்கிரிக்கான விநாயகர், சிவபிரான் பதிகங்களை அடுத்து இரு திருப்புகழ்ச் செய்யுள்கள் எடுத்தன. பதிகம் இல்லாமலேயே முருகப்பெருமானைப் போற்றும் தனித்திருப்புகழ் ஒன்றோடு மொத்தம் மூன்று இங்கு இடம்பெற்றுள்ளன. இவற்றின் ஏழாம் கலைபற்றி முன்பே கூறப்பெற்றது. இவை மூன்றும் வலியதில் வலியதான தய்யச் சந்தம் பயின்று வந்தவை ஆகும்.

இவ்வாறாக இச் சிற்றிலக்கியத்திரட்டில் மொத்தம் 166 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அனைத்திற்கும் உரை வரையப்பட்டுள்ளது. அது விரிவுரையாக இல்லாமல் குறிப்புரையாக அமைக்கப்பட்டுள்ளது என்றாலும் செய்யுளின் பொருளைத் தெளிவாக உணர இக் குறிப்புரை போதுமானது எனக் கருதுகிறேன். பொருள்கோளுக்கு இன்றியமையாது தேவைப்படும் இடங்களில் மட்டும் இலக்கணக் குறிப்புகள் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. ஓரிரு இடங்களில் மட்டும் மேற்கோள்கள் உள்ளன. பக்கங்கள் பல்குதலைத் தவிர்க்க விரும்பியதும், கால அவகாசமின்மையுமே விரிவுரை வரையாததற்குக் காரணிகள்.

இந்தச் சிற்றிலக்கியத் தொகுப்பினை உரையோடு பதிப்பிக்குமாறு பணித்த சிரவையாதீனம் தவத்திரு. குமரகுருபர சுவாமிகளின் திருமுன்புக்கு என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். வெள்ளிவெற்புச் சிலேடை வெண்பா மூலபாடத்தைத் தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் கையெழுத்துப் பிரதியிலிருந்து நன்கு படியெடுத்துக் கொடுத்த சுவடிக் கலைஞர் திரு. ஆர். கிருஷ்ணன் அவர்களுக்கும் என் நன்றி உரியது.

கௌமார மடத்தோடு நெருங்கிய தொடர்புடையவரும், கௌமார மடாலய நிறுவனர், தவத்திரு இராமானந்த அடிகளாரிடமும், இரண்டாவது பட்டம் தவத்திரு கந்தசாமி சுவாமிகளிடமும் பெரும் பக்தி கொண்டவர், மூன்றாவது பட்டம் தவத்திரு சுந்தர சுவாமிகளின் அன்புக்கும். அருளாசிக்கும் பாத்திரமானவர் அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள். டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள், வரலாறு, பண்பாடு, சமயம் போன்ற துறைகளில் பலப்பல நூல்கள் வெளிவர பெரும்பொருளைச் செலவிட்டு வரும் பெருந்தகை. அவர்களின் எண்பதாம் அகவையில் இந்நூலை இராமானந்த அடிகளார் பவுண்டேசன் வெளியிடுவது மிகவும் மகிழ்ச்சிக்குரியது. ஆயிரம் பிறை கண்டு நம்மை வாழ்த்தவுள்ள அவருக்கு எமது பாராட்டும் நன்றியும்.

இந்நூலை அழகுற அச்சிட்டுள்ள ருக்மணி ஆப்செட் அச்சகத்தார்க்கு எம் பாராட்டுக்கள்.

*வெள்ளி மலையில் விளங்கும் பெருமானை*
*கொள்ளைச் சுவைத்தமிழாற் கூறியே - உள்ளம்*
*உருகுதற்காம் நூல் இதனை உள்ளபடி கற்றே*
*பெருகுவளம் எய்தல்சிறப் பே.*

*7.3.2002* **ப.வெ. நாகராஜன்**

# வெள்ளியங்கிரி சிற்றிலக்கியத் திரட்டு

## 1. விநாயகர் மூர்த்தி பதிகம்

### காப்பு வெண்பா

வெள்ளிக் கிரிஅடிவாழ் வேழமுகற் கோர்பதிகம்
தெள்இசை ஆர் செந்தமிழால் செப்புதற்கு - வள்ளி
குயக்குன்றம் சேய்அம் புயக்குன்றம் கூட்டும்
கயக்குன்றம் ஆம் அவன்தாள் காப்பு

அடி – அடிவாரத்தில். வேழ முகன் – யானை முகன். தெள் – பொருள்த் தெளிவும். இசை ஆர் – ஓசை இனிமையும் பெற்ற. குயக்குன்றம் – கொங்கைகளாகிய மலைகளை. சேய் – முருகப் பெருமானின். அம் – அழகிய. புயக்குன்றம் – தோள்களாகிய மலைகளோடு. கூட்டும் – (யானையாக வந்து வள்ளியை அச்சுறுத்தி) அணைவிக்கும். கயக்குன்றம் – மலை போன்ற யானை, முன்பின்னாகத் தொக்க உவமைத் தொகை. தாள் – திருவடிகள்

### நூல்

(எண்சீர் விருத்தம்)

திங்கள் அம்சடா டவியும் முக் கண்ணும்
திகழும் யானைவத் திரமும்ஐங் கரமும்
மங்க ளம்பொலி சித்திபுத் திகள்தோய்
மார்பும் மென்மலர்ப் பதங்களும் பிறவும்
பொங்கம் மேவஎன் அகம்புறம் கண்டு
போற்றிச் சிற்சுகம் பொருந்திட அருள்வாய்;
வெங்க யத்திரள் உலவணி வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 1

1. வத்திரமும் – முகமும். சித்தி புத்திகள் – விநாயகரின் சக்திகள். பொங்கம் மேவ – ஒளிபொருந்த. சிற்சுகம் – இறை அறிவினால் விளையும் இன்பம், ஞானானந்தம். வெம் – விரும்பத்தக்க. கயத்திரள் – யானைக் கூட்டங்கள், அணி – அழகினை உடைய. வெள்ளி வெற்பு அடிக்கண் – வெள்ளியங்கிரியின் அடிவாரத்தில்.

ஈர்த்து வன்பவக் கடலிடை வீழ்த்தும்
இகல்பம னத்திளைத் திடும் எனைத் துயரம்
தீர்த்துன் அன்படி யார் இனம் மூழ்கும்
சிற்சு கோததி யூடுறச் செலுத்தாய்;
பார்த்து வக்கும்ஆன் மாக்களை அநித்தப்
பார்த்து வக்குறப் படுத்தும்வல் வினையின்
வேர்த்து வக்கற வேர்த்திடும் வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 2

2. ஈர்த்து – தன்பக்கமாக வலிய இழுத்து. வன் – கொடிய. பவக்கடலிடை – பிறவியாகிய சமுத்திரத்தில். வீழ்த்தும் – விழச்செய்யும். இகல் – பகையாகிய. மனத்து – உள்ளத்தினால், புலன்களின் வழித்திரிந்து மனம் பிறவிக் கடலில் தள்ளுவதால் பகை ஆயிற்று. இற்சுகோததி – சித் சுகஉததி, ஞானத்தால் விளையும் இன்பமாகிய கடல். பார்த்து உவக்கும் – (தேவரீரைத்) தரிசித்து மகிழும். அநித்த – நிலையற்ற. பார் துவக்கு உற – உலகத்தோடு தொடர்பு கொள்ளுமாறு, உலகியலிலேயே மயங்கும்படி. படுத்தும் – படியவைக்கும், விழச் செய்யும். வேர்த்துவக்கு – மூலமாகிய கட்டு. வேர்த்திடும் – சினங்கொண்டு அழித்திடும். தரிச்சிப்பவர்களின் வினைகளை வேரறுத்து ஆட்கொள்பவர் விநாயகர் என்பது கருத்து.

அருப்பி ணைந்தசெவ் வரிமதர்க் கண்ணால்
அங்கை யால்இரு கொங்கையால் மனத்தை
நெருப்பி யைந்திடும் மெழுகென உருக்கும்
நீச மங்கையர் பாசம்என் றொழிப்பாய்?
மருப்பி யைந்தருஞ் சரத்திரள் இனம்ஆ,
மதித்து நாள்தொறும் மலர்அலர் கொண்டு
விருப்பி யைந்துபூ சனைசெய வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 3

3. அருப்பு இணைந்த – இமையின் மெல்லிய உரோமங்கள் சேர்ந்துள்ளதும். மதர் – செழிப்பினை உடையதும். என்று – எந்நாள். மருப்பு – கொம்பு. இனமா – தம்முடைய சுற்றமாக. மலர் அலர் – பூக்கின்ற பூக்கள், வினைத் தொகை, மலரும் அலரும் என உம்மைத் தொகை ஆக்கினும் அமையும், இப்பொருளில் அலர் என்பது நீர்.

வெளிகொள் வேடத்தால் உலகரை மருட்டும்
வேட னேன்உன்பொன்த் தாள்தலை அமைத்து
களிகொள் பேரருள்க் கடலிடை மூழ்கக்
கண்ணி லேன்அகக் கண்இலேன்; அருள்வாய்;
அளிகொள் விம்பிதப் பொழில்க்கனி அருந்தி
அஞ்சு கத்திரள் அஞ்சுகம் வரினும்
விளிகொ ளேம்என மறைபுகல் வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 4

4. வெளிகொள் – புறத்தில் கொண்டிருக்கின்ற. வேடனேன் – கபடவேட தாரியாகிய அடியேன். கண்ணிலேன் – நினைக்கவில்லை. அகக் கண் இலேன் – உள்ப்பக்க விழி இல்லாதவன். அளிகொள் – தேன் நிறைந்த, இது கனிக்கு அடை. விம்மித – வியப்பிற்கு இடமான. பேரூர்ப்புராணத்தில் வெள்ளி மலையின் வியப்புக்களைக் கூறுவதாக விம்மிதப்படலம் என ஒரு தனிப்பிரிவே உள்ளது. அஞ்சுகத்திரள் – கிளிக்கூட்டங்கள். அஞ்சு உகம் வரிறும் – ஐந்து யுகங்கள் கழிந்தாலும். விளி கொளேம் – சாகமாட்டோம், விளி முதனிலைத் தொழிற்பெயர்.

ஆல காலமும் வடவையும் கலந்தாங்கு
அடிய னேன்உயிர் துடிதுடித் திடச்செய்
மூல வன்மலப் பிணிஒழித் தாளல்
முதல்வ! நிற்கலால் பிறர்க்குமுற் றுவதோ?
சீல ஔவையை முன்அமைத் தாங்கு
செறிஉ யிர்க்குலம் முற்றவும் கயிலை
மேல்அ மைத்திட அருளினால் வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 5

5. ஆலகாலம் – பாற்கடல் கடைந்த போது தோன்றிய நஞ்சு. வடவை – ஊழித் தீ, கடலின் நடுவில் பெண்குதிரை உருவத்தில் உள்ளதாகக் கூறப்படும் சூரியனைக் கூடிய அஸ்வினி எனினும் ஆம். வன் மூலமலம் எனமாறுக. மூலமலம் – ஆணவம். முற்றுவதோ என்றழி வினா எதிர்மறை. சீல ஔவை – இரட்டுற மொழிதலாக நல்லொழுக்கத்தில் ஒழுகிய எனவும் சீலப் பனுவல்களை (நீதி நூல்கள்) இயற்றியருளிய எனவும் கொள்க. அருளினால் கயிலைமேல் அமைந்திட வாழ் எனக் கொள்க.

ஆர ணத்திரள் அறிவரும் நின்பொன்
அடியை என்சிறு முடிமிசை அமைத்துப்
பூர ணத்தனி அகண்டவான் அணைமேல்ப்
பொருத்தி மெய்ப்பர போகம்என் றருள்வாய்?
பார்அ ணங்குதுன் பொழிந்திடத் தன்பால்ப்
படிந்த பேர்அருள் படிந்திடப் புரியும்
வீர ணம்கமழ் காஞ்சிசூழ் வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 6

6. ஆரணத்திரள் – வேதக் கூட்டங்கள், (அனந்தாவை வேதாஹ – மறைகள் எண்ணற்றவை என்ப) தனி – ஒப்பற்ற. என்று – எந்நாள். பார் அணங்கு – உலகியல் (ஆசைகள்) துன்புறுத்துகின்ற, அணங்கு துன்பு வினைத்தொகை. துன்பு – வருத்தம். தன்பாற் படிந்தபேர் – (நொய்யல் ஆறாகிய) தன்னில் நீராடியவர்கள். அருள்படிந்திட – தெய்வத் திருவருளில் மூழ்க. வீரணம் – விளாமிச்சை வேர். காஞ்சி – நொய்யல். ''காஞ்சி உந்தி ஆம்சிறிது உண்டோர் தாமும் அமரராய் முத்தி சேர்வார்'' என்பது தலபுராணம் (தீர்த்தப்படலம் 36).

ஏசி யேவெறுக் கினும்விடா தென்னை
இகலி, மேல்எடுத் தெழும்பெரும் காற்றின்
தூசி போல்ச்சுழற் றிடும் கொடு மாயைத்
துவக்கி னால்த் துயர்ந் தனன்; துணை புரிவாய்;
தேசி லங்கெழில் மலைவடி வாகும்
சிவபி ரான்நயப் பால்அருள் அருவி
வீசி ஆட்டினன் மகிழ்தர வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே. 7

7. என்னை இகலி – என்னுடன் பகை கொண்டு. மாயைத் துவக்கினால் – மாயாமலத்தின் பிணிப்பின் காரணமாக. துயர்த்தனன் – துயரம் அடைந்தேன். அரிய ஆட்சி. தேசு இலங்கு – ஒளி வீசுகின்ற. வெள்ளிங்கிரி மலையே சிவபெருமானின் வடிவமாகும். ''இரசத வரையாய் முப்புரங்களை எரித்தருள் முதல்வனே இருந்தான்'' என்பது பேரூர்ப் புராணம் (காமதேனு வழிபடு படலம் 36). ஆட்டினன் – ஆடி, முற்றெச்சம்.

ஏது சொல்லினும் நீதிரு உள்ளத்து
இரக்கம் அற்றவர் எனஇருந் திடில்யான்
சூது தோய்புலப் பகைவிருந் தாகித்
தொலைவ தன்றிமெய்ந் நிலைபெறல் உளதோ?
போது கொண்டுபொன் அடிபணி வார்அம்
புயத்தில்க் கற்பகம் புனைந்து,தம் முடியின்
மீது கொள்ளவிண் ணவர்வரும் வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 8

8. அற்றவர் என – இல்லாதவர்போல, இறைவன் கருணையே வடிவானவன் சில நேரங்களில் உயிர்களின் வினையால் இரக்கம் இல்லாதவன் போல இருக்கிறான். சூதுதோய் – வஞ்சகமான. புலப்பகை – ஐம்புலன்களாகிய சத்துருக்களின். மெய்ந்நிலை – அழியாத பேரின்பமாகிய வீட்டுப்பேறு. போது – மலர்கள். அம் – அழகிய. புயத்தில் – தோள்களில். அம்புயத்தில் (தாமரை) கற்பகம் புனைந்து என்றது நயம். விநாயகரின் அடியார்களைத் தேவர்கள் மாலை சூட்டி வரவேற்று உபசரிப்பர் என்பது கருத்து.

வாதி டும்புலக் குரம்பையுட் கிடந்து
வாடும் என்துயர் மதித்தனை அருளாய்;
நீதி நீசெலுத் திடத்துணிந் திடில்யான்
நிகழ்த்தல் என்னைகாண்? நீடருள்க் கடலே!
சோதி அம்சுடர் உடுக்குலம் சாரி
சுற்ற, நீண்டு, மெய்த் தொண்டர்கள் படரும்
வீதி ஒத்தியல் பேர்அருள் வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 9

9. வாதிடும் – போர்புரிகின்ற. புலக்குரம்பை – ஐம்புலன்களை உடைய உடல். மதித்தனை – கருதி, முற்றெச்சம். நிகழ்த்தல் – கூறுதல், சுடர் – சூரியன் சந்திரன் ஆகிய இரு சுடர்களும், உடுக்குலம் – நட்சத்திரக் கூட்டங்களும், ஈரிடத்தும் எண்ணும்மை தொக்கது. சாரி சுற்ற – உலாவர. மலையில் பரிதி, மதி, விண்மீன்கள் ஆகியன இயங்குவது வீதிஒன்றில் இறையடியார்கள் அமைதியாகவும் முறைதவறாமலும் செய்வதைப் போல உள்ளது.

பதுமம் ஒத்தநின் கழல்க்கடல்ப் படிந்து,
பரவு செந்தமிழ்ப் பாமழை பொழிந்து,
புதுமை ஆயிரம் விளைத்தருள்ப் பதத்தில்
புகவி ழைந்தனன்; அகம்இ சைந்தருள்வாய்
மதும ழைப்பொழில்க் குஞ்சரம் அமுதர்
வழங்க லானக வளம்கொல்என் றுவந்து
விதுவி திர்ப்புறப் பற்றுயர் வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரனே! 10

10. பதுமம் – தாமரை. என் உள்ளமாகிய மேகம் என்பதனைப் படிந்து, பொழிந்து, விளைத்து, புக விழைந்தனன் என்னும் எச்சங்கட்டும் முற்றுக்கும் எழுவாயாக வருவிக்க. முற்றுருவகம். அகம் இசைந்து – மனது வைத்து. மது மழைப்பொழில் – தேனாகிய மழைபொழிகின்ற மலர்ச் சோலைகளில் திரிகின்ற. குஞ்சரம் – யானை. அமுதர் – தேவர். வழங்கலான கவளம் – வழக்கமாக உண்ணுகின்ற உணவு உருண்டை (அமிர்தக் கட்டி). என்று உவந்து. விது – சந்திரன். விதிர்ப்புற – அஞ்சும்படி. பற்று – பிடிக்கின்ற. யானை திங்களை அமுதக் கவளம் என மயங்கிப் பற்ற முயல்வதால் அது அஞ்சுகிறது, மயக்க அணி. ஒப்பு :- ''திங்கள் இறுமாந்து உலவத் தீம்பால்க் கவளம்என்று வெம்களிறு கைநீட்டும் வேங்கடமே'' (திருவேங்கடமாலை 31), ''அம்புலியைக் கவளம்என்று தும்பிவழி மரிக்கும் (குற்றாலக் குறவஞ்சி 46)

கண்நு தற்பிரான் திருவடித் தலத்தில்க்
கவின்ற அற்புக் காட்சியை மண்ணார்
விண்உ ளார்எனத் தேர்தர வெள்ளி
வெற்ப டிக்கண்வாழ் விக்கினேச் சுரன் மேல்த்
தண்ட லாம்பொழில்ச் சிரவைகொள் கந்த
சாமி புன்சொலால் சாற்றுபா மாலை
எண்ணு வார்இறை வன்திரு அருளால்
இகப ரப்பயன் எய்தல்நிச் சயமே 11

11. விநாயகர் வெள்ளியங்கிரியின் அடிவாரத்தில் இருப்பது சிவபிரானின் மடியில் இருப்பதைப் போன்றது. என்னை? இந்த மலையே இறைவனின் திருவடிவமாதலின். என – போல. தண்உலாம் – குளிர்ச்சிபொருத்திய. எண்ணுவார் – விரும்பி ஓதுபவர்கள். ஈற்றேகாரம் தேற்றம்.

## 2. வெள்ளிக்கிரியான் பதிகம்

### அறுசீர்ச் சந்தவிருத்தம்

ஆடும் பணிஆ பரணம்
சுரர்என் பயனார் தலைமாலை
சூடும் பணிலக் குழைஆர்
சிவ! நின் சுகிர்தப் புகழ்அன்பால்ப்
பாடும் பணியில்ப் பதிவிதாது
எனக்குள் பாதப் புகல்ஆகும்
வீடும் பனியாய்; சேடுந்து
அணிசால் வெள்ளிக் கிரியானே! 12

1. ஆடும் பணி – ஆடுகின்ற பாம்புகளும். சுரர் என்பு – தேவர்களின் எலும்புகள். அயனார். தலை – பிரமனின் கபாலம். பணிலக் குழை – சங்கினாலாகிய காதணி. சுகிர்தப் புகழ் – நற்செயல்களால் விளைந்த கீர்த்தியை, மூன்றன் தொகை ஏதுப் பொருள். பதிவித்து – ஈடுபடுத்தி எனக்கு உன். பாதப்புகல் – திருவடிகள் ஆகிய அடைக்கலம். சேடுஉந்து அணி – நன்மைமிக்க அழகு.

ஈன்றோய் வறுதுன் புடனே
வளர்த்தாள் இன்பம் புசித்தானை
ஏன்றோய்க் கடியேன் றனைஆண்டு
அருள எண்ணிற் புகழ்போமோ?
கான்தோய் தருவெண் ணிறமா
மலர்கள் ககனத் திடம்மேவும்
மீன்தோய் வியன்காட் டிடுதென்
கயிலை வெள்ளிக் கிரியானே! 13

2. ஈன்று – பெற்றெடுத்து. ஒய்வு அறு. இன்பம் புசித்தான் – தாயைப் புணர்ந்து தந்தையைக் கொன்ற அவந்தி நாட்டுப்பார்ப்பான், திருவிளையாடற் புராண மாபாதகம் தீர்த்த படல வரலாறு. ஏன்றோய்க்கு – ஏற்றுக்கொண்ட தேவரீருக்கு. கான்தோய்தரு – காட்டில் உள்ள. ககனத்திடம் – ஆகாயத்தில். மீன் – நட்சத்திரம். வியன் – பெருமை, இங்கே அழகு.

ஏனக் குருளைத் துயரம்
சகியா தின்பால் அளித்திட்டாய்;
நான்நத் தியவா றருளாது
அவமே நலியச் செயல் ஏனோ?
வானத் தியல்பூஞ் சுனையில்ப்
பொலியும் வாளைத் திரள்விண்ணார்
மீனத் திடம்பாய் வளம்மிக்கு
இயலும் வெள்ளிக் கிரியானே! 14

3. ஏனக்குருளை – பன்றிக் குட்டி, இதுவும் திருவிளையாடல் பன்றிக் குட்டிக்கு முலை கொடுத்த படல வரலாறு. இன் – இனிய. நத்தியவாறு – விரும்பியபடி. அவமே – வீணாக. வால்நத்து இயல்பூம் சுனையில் – ஒளிமிக்க சங்குகள் இயங்குகின்ற அழகிய நீர்நிலையில். வாளைத்திரள் – வாளை மீன் கூட்டங்கள். வீண்ஆர் மீனத்திடம் –வானில் பொருந்தியுள்ள நட்சத்திரங்களை நோக்கி.

வெண்நத் தியல்கை யினன்எட்
டரிதா விளங்குன் பதமீதே
வண்ணத் தமிழ்மா லிகைசூட்
டிடுவான் மதிக்கும் தகைகொள்வேன்
எண்ணற் றிடுதுன் புடன்வா
டிடல்நின் இதயத் திசைவேயோ?
விண்ணத் தவரும் தவரும்
பரவும் வெள்ளிக் கிரியானே! 15

4. வெண்நத்து – வெண்மையான சங்கு. கையினன் என்றது திருமாலை. மதிக்கும். – நினைக்கின்ற. தகைகொள்வேள் – பண்பினைப் பெற்றுள்ள அடியேன். விண்ணத்தவரும் – தேவர்களும். அம் அத்து இரண்டும் சாரியைகள். தவரும் – தவசிகளும். பரவும் – போற்றுகின்ற.

உகம்பற் பலசென் றிடினும்
தமியேன் உன்பேர் அருள் அல்லால்ச்
சுகம்பற் றிடுமா றறிகின்
றிலன்; தீ சோதித் திடல்; எந்தாய்!
முகம்பற் பலகொண் டுளஆ
ரணம்போல் முதிர்இன் இசைகொண்டு
விகங்கத் திரள்பா டிடுதென்
கயிலை வெள்ளிக் கிரியானே! 16

5. தமியேன் – வேறு புகலற்ற அடியேன். சுகம் – பேரின்பம். சோநித்திடல் – சோதனை செய்யாதே, அல்ஈற்று எதிர்மறை வியங்கோன், ''பயனில் சொல் பாராட்டு வானை மகன் எனல்'' (திருக்குறள் 196) என்புழிப் போல. ஆரணம் – வேதம், இது பலவகைப்படும். விகங்கத்திரள் – பறவைக் கூட்டங்கள்.

அளிவந் திடுதாள் மலர்தந்து
அருள்; என் அப்பா! அருள்வைப்பே!
துளிவந் திடுகண் ணுடன்நின்
புகழே துதித்தின் புற ஆள்வாய்;
ஒளிவந் திடும்உன் ஒளியே!
உயிர்க்கும் புதிப்போ டிறப்பற்று
வெளிவந் திடும்மா வெளிதங்கு
இயல்சீர் வெள்ளிக் கிரியானே. 17

6. அளிவந்திடு – கருணை பொழிகின்ற, இரட்டுற மொழிதலாக வண்டுகள் மூசுகின்றதையும் கொள்க. துளி – கண்ணீர்த்துளி. உயிர்க்கும்பு – ஆன்மக் கூட்டங்கள். உதிப்போடு – பிறப்போடு. வெளிவந்திடும் – வினைக் கட்டிலிருருந்து விடுதலை பெறுவது ஆகிய. மாவெளி – பரவெளி, சிதாகாசம்.

கண்ஆம் வலையில்க் கட்டிப்
புன்சீழ்க் கட்டித் திடர்ஏற்றிப்
புண்ஆர் குழிவீழ்த் திடுவார்
மயலில்ப் புரளா தெனை ஆள்வாய்;
தண்ஆர் மதியும் பணியும்
புனையும் சடையாய்! விடையானே!
வெண்நால் வாயின் திரள்சேர்
பொழில்சூழ் வெள்ளிக் கிரியானே. 18

7. திடர் – மணல்மேடு, இங்கு நகில்கள். ஆர் – போன்ற. பணியும் – பாம்புகளையும். விடையானே – ஏற்றைக் கொடியாக உடையவரே. வெண் நால்வாயின் திரள் – வெள்ளை யானையின் வேகமான நடை, இந்திரன் இறைவனைக் காண விரைந்து வருதலால் ஐராவதம் வேகமாக நடக்கிறது.

புல்உண் டுறும்பு, இலைத்தான்
    நுகர்வார் புன்மைக் குணந்தன்னைச்
சொல்உந் தியபாப் படையால்
    ஒழிக்கத் துணிவேற் கருளாயோ?
அல்லும் பகலும் காணாத்
    தவர்தம் அகம்ஒத் துலகின்கண்
வில்உந் தியமெய் பெறுதென்
    கயிலை வெள்ளிக் கிரியானே. 19

8. பாப் படையால் - செய்யுள்களாகிய ஆயுதத்தால். துணிவேற்கு - துணியும் அடியேனுக்கு. அல்லும் பகலும் காணாத் தவர்தம் இறப்பும் பிறப்பும் இல்லாத தவசிகளின். அகம் - உள்ளம். வில் உந்திய - ஒளிமிக்க. மெய் வடிவம். வெள்ளியங்கிரியின் ஒளி தவசிகளின் அகம்போன்றது என்பது உவமை.

காதும் தொழிலார் காதுந்
    தியமைக் கண்ணார் உதரத்தில்ப்
போதும் தொழில்நீர்த் துன்தாள்
    வனசப் போதொன் றிடஆள்வாய்;
போதுந் தியபோ தன்கைக்
    கொடுசெய் புரம்கட் டருள்வான்
மீதுந் திடஆர் உயிர்கட்கு
    அருளும் வெள்ளிக் கிரியானே! 20

9. காதும் தொழில்ஆர் - உயிர்களைக் கொல்லும் செயல் பொருந்திய காது உந்திய - செவிகள்வரை நீண்டுள்ள. உதரத்தில் போதும் - வயற்றில் புகும், மறுபிறவி எடுக்கும். வனசப் போது - தாமரைப் பூவின்கண். போது உந்திய - காலம் மிக அதிகம் ஆன, வயது முதிர்ந்த. போதன் - பிரமன். புரம் - உடலை. அருள்வான் - அருளும்பொருட்டு. ஆர் உயிர்கட்கு மீது உந்திட அருளும்.

கரணத் துடன்ஐம் பொறியும்
    புலனும் கலங்கும் படிஎய்தும்
மரணத் தியக்கந் தனைஅஞ்
    சினன்நின் மலர்த்தாள்ச் சரண் ஆனேன்;
புரணப் பொருளே! கருணைக்
    கடலே! புயங்கப் பணியானே!
விரணப் படுநெஞ் சுவக்கப்
    புரிவாய்; வெள்ளிக் கிரியானே! 21

10. கரணத்துடன் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக் கரணங்களோடு. ஐம்பொறியும் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து அறிகருவிகளும், புலனும் - பொறிகளின் விஷயமாகிய ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் ஐந்தும். இனிப்பொறிகளை தொழிற்கருவிகளாகிய வாய், கால், கை, மலவாய், கருவாய் (கருமேந்திரியங்கள்) என்றும், புலன்களை ஞானேந்திரியங்கள் ஆகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்றும் அறிகருவிகளாகவும் கொள்ளினும் இழுக்கின்று). தியக்கந்தனை - சஞ்சலத்திற்கு, தன் பகுதிப்பொருள்விகுதி. இரண்டன் உருபு நான்கண் பொருளில் வந்தது. அஞ்சினன் - பயப்பட்டு. முற்றெச்சம். பூரணம் - பூரணமானவை. புயங்கப்பணியானே - பாம்புகளை அணிகலன்களாக அணிந்தவரே. விரணப்படு - புண்பட்ட.

ஊனைப் பொருளை மனையைச்
சதம்என் றுன்னிச் சுழல்வார்தம்
ஆணைக் கடங்கிச் சுகம்எய்
திடுவான் அயரும் சிறியேற்குன்
சேணைக் கடந்த பதம்கண்டு
உவக்கும் செயல்என் றருள்செய்வாய்?
வீணைக் கரத்தன் புகழ்ந்தேத்து
இசைசால் வெள்ளிக் கிரியானே. 22

11. ஊனை - உடலை. மனையை - மனைவியை. சதம் - நிலையானது. உன்னி - நினைத்து. சுகம் - உலகியல் இன்பம். அயரும் - (முயன்று) தளர்கின்ற. சேணைக் கடந்த - வானத்தையும் தாண்டிய. பதம் - திருவடிகள். என்று - எந்நாள். வீணைக் கரத்தன் - மகதியாழ் முனிவனாகிய நாரதன், நாரதன் இம்மலையை வழிபட்ட வரலாற்றைப் பேரூர்ப்புராணம் நாரதன் வழிபடு படலத்தால் அறியலாம்.

நாதக் கழல்ஆர் பரன்பேர்
உருவாய், நல்லோர் தொழமேவி
வேதப் பொருள்ஆம் சிவவாழ்வு
உதவும் வெள்ளிக் கிரியான்மேல்ச்
சீதப் பொழில்ஆர் சிரவைக்
கந்த சாமி செயும்பாடல்
ஓதப் பெறுவார் பலபே
றும்பெற் றுயர்வீ டுறுவாரே. 23

12. நாதக் கழல் ஆர் - நாத தத்துவமாகிய வீரக்கழலை அணிந்துள்ள. சீத - குளிர்ந்த

## 3. சத்தியநாயக மாலை

### காப்பு வெண்பா

மாயவனும் ஏத்துவெள்ளி மால்வரை ஆம் தென்கயிலை
நாயகனுக் கோர்மாலை நான்அணிதற் - காயதுணை
என்மனத்துள் மேவும் இராமானந் தப்பெருமான்
பொன் மலர்செம் பாதாம் புயம்

மாயவனும் - திருமாலும். இவர் கோமுனியாக வழிபட்டு நடன தரிசனம் செய்த வரலாறு பேரூர்ப் புராணத்தில் உள்ளது, உயர்வு சிறப்பும்மை. வெள்ளிங்கிரி தென்கயிலாயம் எனப்படும். ''கோமுனி பூசை கொண்டவர் தென்கயிலாயத்தை'' (பேரூர்ப் புராணம், தென்கைலாயப் படலம் 73). பொன்மலர் - ஒளி விரிகின்ற, மலர் அம்புயம் (வினைத்தொகை). செம் அம்புயம், பாத அம்புயம் எனத் தனித்தனி இயையும்.

### நூல்

எழுசீர் விருத்தம்

மண்அளந் திடும்மால் எட்டரும் பதமும்
மலர்அயற் கரியநீள் முடியும்,
பெண்அவிர் பாக மும்கணப் போதும்
பிரிதரா தென்உளத் திருப்பாய்;
''வண் நரர்க் கன்று; போகபூ மியர்க்கும்
வழங்குதும் கதிஎன நீண்டு,
விண் அகம் போழ்ந்து விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 24

1. மால் அயன் அறியாதது வெளிப்படை. பெண் - உமா தேவி. வள்நரர் - வளம் பெற்ற மானிடர், இங்கு வளம் என்றது முக்திபெறும் வாய்ப்பை போக பூமியர் - சுவர்க்க லோக வாசிகள். மேல் உலகில் புண்ணியப் பயனாக இன்பத்தைத் துய்க்கின்றவர்கள் நிலையான முத்தியைப் பெற இயலாது. கருமபூமியில் உள்ள மனிதர்களே வீட்டின்பத்தைப் பெற முடியும். ''போக பூமியினில் போக தனுவினால் பொருந்தல் ஆகா தேகம் ஆம் இன்ப சித்தி

இயும்புறில்க் கரும பூமி ஆகமா வது கொண் டன்றி; ஆதலால் ஞாலத் தெய்தி யோகமா நெறியில் நின்றோர் உண்மைசா தித்துக் கொள்வர்'' (பிரபுலிங்கலீலை, கைலாச துதி 52). இறைவன் தம் பெரும் கருணையால் விண்ணவர்க்கும் கதி அளிப்பதற்காக வானளாவ உயர்ந்த மலையாகத் தோன்றி விளங்குகிறார் என்றவாறு. தற்குறிப்பேற்ற அணி.

மலைஉருக் கொடுநீ விளங்கியும் மலத்தால்
மதித்திடா தூன்நசைத் துழலும்
புலையரைப் பாடிப் பொருள்மதித் திழிபுன்
புலவரை மதித்திடா தருள்வாய்;
எலைஇல்ஆ ரணங்கட் கெட்டரும் தன்சீர்
இசைத்து நாள் தொறும்துதிப் பார்க்கு
விலைஎனத் தன்னை வழங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 25

2. மலத்தால் – ஆணவத்தின் காரணமாக ஊன் நசைத்து – புலால் உணவை விரும்பி. பொருள் மதித்து – பணத்தைப் பெரிதாகக் கருதி. எலை – எல்லை, இடைக்குறை, எதுகை நோக்கியது. ஆரணங்களுக்கு எட்டரும் – வேதங்களாலும் பெற முடியாத, ''வேத புருடனும் யாதுநின் நிலைஎனத் தேறலன் பலவாக் கூறினன் என்ப'' (சிதம்பரமும் மணி கோவை 17) தன்னை வழங்குதல் : ''தந்தது உன்றன்னை; கொண்டது என்றன்னை'' (திருவாசகம், கோயில் திருப்பதிகம் 10), ''கொண்டனை என்னை; உன்னைக் கொடுத்தனை'' (கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி 55).

பெண்டொடு மைந்தர் சோதரர் சுற்றம்
பெற்றவர் மற்றவர் பலரும்
தண்டொடு தோன்றாக் காலனில் என்னைத்
தண்டொடு சூழ்தலில்த் தளர்ந்தேன்;
மண்தொடும் கேழல் மால்என அடியும்
மதிஎகி னப்படி அயன்போல்
விண்தொடும் முடியும் நேடுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 26

3. பெண்டொடு – மனைவியுடன். தண்டொடு தோன்றா – கதாயுதத்துடன் காட்சி அளிக்காத. காலனில் – இயமனைப் போல.

தண்டொடு - (தக்கம்) கூட்டக்கோடு. கேழல் - பன்றி. மதி - சந்திரன். எகினப் படி - அன்னமாக வடிவெடுத்த பன்றி வெள்ளிப்பங்கிரியில் விலக்கைத் தோண்டுகிறது; இது திருமால் அடியைத் தேடியது போல உள்ளது. முடியில் தோய்கின்ற சந்திரன் அன்னப்பறவை போல் தோன்றிப் பிரமன் முடி தேடியதை நினைவூட்டுகிறது. தேடு - தேடுகின்ற, "வித்தக விலங்கல் அடி காண விழைவுற்றுப் பத்தியொடு நாரணர் பரித்தடரு என்னக் கொத்திகொடு பன்றியொரிர் குன்றடி அகழ்ந்து மெதிது கிழங் காடுவன வினை முனி கண்டான்." (பேரூர்ப்புராணம் - நாரதன் வழிபாடு படலம்).

எய்தரும் பிறவி கிடைத்தும்உன் அடியை
எண்ணிலேன் அமுதினைக் கமரிலர்ப்
பெய்தவர் பேதை போலிகத் தளறாம்
பேதையர் காதலிற் சுழன்றேன்;
கைதழு வியமான் ஒன்றலால் மற்றைக்
கணங்களும் மெய்தழு வாது
மெய்தழு விடக்குன் றுருக்கொள்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 27

6. எய்தரும் - கிடைத்தற்கரிய. "அரிதரிது மானிடராகப் பிறத்தல் அரிது" என ஒளவைப்பிராட்டியும் "எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்" எனத் தாயுமானவரும் (சித்தர்கணம் 4) கூறுவர். கமரில் - நிலத்தில் உள்ள வெடிப்பினில். இகத்து அளறு ஆம் - இந்த உலகத்தின் நரகம் ஆகிய. கை தழுவிய மான் - சிவ பெருமானின் கையில் உள்ள மான். ஒன்று அலால் - ஒன்று மட்டுமே அல்லாமல். மற்றைக் கணங்களும் - மற்ற எல்லா விலங்கினங்களும். மெய் தழுவாது - மற்றொரு உடலை எடுக்காமல், பிறவி இல்லாமல். மெய் தழுவி - தன் உடலாகிய வெள்ளிமலையில் பொருந்த, இரட்டுற மொழிதலாக நிலையான பேரின்பத்தைப் பெற என்றும் கொள்க. வெள்ளியங்கிரி இறைவன் வடிவமாதலின் அங்கு உலவும் விலங்குகளும் வீடுபெறும் என்பது கருத்து. எழுவகைத் தோற்றத்துள்ள எவ்வகை உயிரும் உய்யக் கொழுமணி இமைக்கும் வெள்ளிக் குன்றமாய்த் தென்பால் நின்றான்" என்பது தலபுராணம் (புராண வரலாற்றுப் படலம் 41).

கொடுவரிச் செயலை மறந்ததன் தோல்மேல்க்
கோலம்நோக் குறஅணை வார்போல்
வடுநிகர் விழியார் இச்சைகொண் டுழல்என்
மனத்தினைத் திருத்தியாண் டருள்வாய்;
கடுஅமைந் தியல்கந் தரத்தினைக் கடுப்பக்
கந்தரம், கவின்பொலி விழிபோல்
விடுசுடர்ப் பரிதி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 28

5. கொடுவரி – புலி. செயல் என்றது கொல்லும் தொழிலை. கோலம் – அழகை. வடு – மாவடு. கடு – நஞ்சு. கந்தரத் தினைக் கடுப்ப – கழுத்தைப் போல. கந்தரம் – மேகம் மலையில் மேகம் தவழ்வது சிவபிரானின் கழுத்துக் கறைபோலவும், சூரியன் கண்ணைப் போலவும் காட்சி தருகின்றன. கந்தரமும் பரிதியும் என ஈரிடங்களிலும் என்றும்மை விரிக்க. (5)

மறைமுடிக் கணிஆம் நின்அடிக் கமல
மணிமுடி என்இரத் தணிந்து
தறைஅல தண்ட கோடிகள்க் கெல்லாம்
தனிஅர சாற்றஎன் றருள்வாய்?
நிறைமணிக் கழையின் நுனிக கனத்தில்
நேர்ந்தினன் இரதம்மே வருணன்
மிறைஅறப் பரிகள்ப் புடைக்கும் தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 29

6. அணி – ஆபரணம். மணி முடி – அழிகய கிரீடம். தறை அலது – நில உலக மக்களுக்கு மட்டுமே அல்லாமல். தனி அரசு ஆற்ற. மணி நிறை கழை என மாறுக, முத்துக்கள் நிறைந்த மூங்கில், முத்துப் பிறக்கும் இடங்களுள் மூங்கிலும் ஒன்று. ககனத்தில் – வானில். நேர்ந்து – பொருந்தி. இனன் இரதம் மேவு – சூரியனின் தேரில் இருக்கின்ற. அருணன் – சூரியனின் தேரோட்டி. பிறை அற – வருத்தப்படாமல். பரிகள் – தேர்க் குதிரைகளை. புடைக்கும் – அடித்து ஒட்டும். மலையில் விளைந்த மூங்கிலின் நுனி சூரியனின் தேர்க் குதிரைகளை ஒட்டுகின்றன; இதனால் அருணனுக்கு வேலை குறைகிறது. அணி.

துன்பலை வறால் இரும்மட வாரைத்
துதித்தவர் பலசெயத் துணிவேன்;
இன்பமே தரினும் சற்றுனை நினையேன்
என்மதி என்மதி? இசையாய்;
கொன்பயில் கரித்தோ லிடைதிரு மேனி
குலவல்போல்ச் சோலையின் நாப்பண்
மின்பயில் சோதித் தருக்கொள்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 30

7. சற்றும் உனை என எம்மை விரிக்க. என்மதி என்மதி – என்னுடைய அறிவு என்ன அறிவு, பயனற்றது என்றவாறு. கொன்பயில் - பெருமைமிக்க. கரித்தோலிடை - யானைத் தோலுக்கிடையே. நாப்பண் - நடுவே. பசுமையாக நெருங்கிய மரங்களுக்கிடைய சோதிமரம் ஒளிவீசுவது கரித்தோலுடைக்கு நடுவே செம்மேனியம்மான் இருப்பதைப் போல உள்ளது. சோதிமரத்தைப் பற்றித் தலபுராணம், ''செங்கையின் அமைந்து ஒளி திகழ்ந்த தழல் ஒப்பத் துங்கஒளி கான்றுவளர் சோதிமரமும்'' (நாரதன் வழிபடு படலம் 14) எனவும், '' ஓதலுறும் பால்க்கிணற்றுக் கீழ்த்திசையில் ஓசனை மூன்றளவில்க் காணும் சோதிமரம் உளது'' (விம்மிதப்படலம் 8) எனவும் குறிப்பிடுகிறது.

காயம்ஆம் சிறைக்குள் இன்பதுன்பப் பொய்க்
கனவுகண் டுழலும்என் உயிர்நின்
தூயபேர் இன்பத் துணைஅடி வீட்டில்த்
தோய்ந்துநித் திரைசெயல் உளதோ?
நேயம்ஆர் உமையின் தோள்என வரையா
நின்மலற் றழுவுதும் என்று
வேய்அள வறவாய்ந் தோங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 31

8. அடி - திருவடிகளாகிய. வீட்டில் - முத்தியில். நேயம் – அன்பு. வரையா - கருதி, செய்யா எனும் வாய்பாடு. நின்மலர் - சிவபெருமானை. வேய் - மூங்கில்கள். அளவு அறவாய்ந்து. மூங்கில்கள் தாம் உமையம்மையின் தோள்களைப் போல இருப்பதால் மலைவடிவ இறைவனைத் தழுவுகின்றன.

நாவலர் கோன்போல் உனைமனைக் கொற்றா
நடந்திட வேண்டிலேன்; என்னை
ஏவலன் எனக்கொண் டுன்அடிப் பணிகள்
ஈய்வே வேண்டினன்; இரங்காய்;
தேவர்மா னிடர்தம் தருக்கறத் தருக்கள்
தேன்கனி இரசம்மீ தாட்டி
மேவலர் பொழிந்து வணங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 32

9. நாவலர்கோன் - சுந்தரமூர்த்தி நாயனார். மனைக்கு ஒற்றா - மனைவியிடம் தூதாக. ஏவலன் - பணியாள். அடிப்பணிகள் - திருவடித்தொண்டுகள். தருக்கு - (நாம் இறைவனை நீராட்டிப் பூசிக்கிறோம் என்றும்) செருக்கு தருக்கள் - மரங்கள். மீது - இறைவடிவாகிய மலையின் மேல். மேவு அலர் - தன்பாற்பொருந்திய மலர்களை.

குற்றம்என் றறிஞர் வெறுத்தன வாம்துர்க்
குணம் எலாம் கூடிஇங் கென்னை
அற்றம்இல் துயர்செய் திடத்தளர்ந் தனன்; அன்
னவர்உளத் தன்பைஎன் றளிப்பாய்?
கொற்றவிண் வேந்தன், கரிஉரி என்னக்
கொண்டல்அம் கலைஉடுத் தவிர்வான்
விற்றழை மாலை சூட்டுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 33

10. துர்க்குணம் - தீய பண்புகள். அற்றம் இல் - குறைவற்ற, நிறைய. அன்னவர் என்றது வெறுக்கும் அறிஞர்களை. என்று - எந்நாள். கொற்ற - வெற்றிமிக்க. விண்வேந்தன் - இந்திரன் கரிஉரி என்ன - யானைத் தோலைப் போன்ற கொண்டல் - (தன் வாகனமாகிய) மேகத்தை அம்கலை உடுத்து - அழகிய ஆடையை அணிவித்து, மேகங்களைத் தவழச் செய்து. அவிர் வான்வில் தழைமாலை - விளங்குகின்ற (இந்திரனின் வில் எனப்படும்) வானவில்லாகிய செழிக்க ஹாரத்தை, தழைமாலை ஒப்பு'' கருவி நீண்முகற் கஞ்சுகம் போர்த்ததன் மேலால் குருதி மாமணிக் கொழுநிற வானவில்ப் பைம்பூண் மகுடம் வீழ்ந்தரப் பூண்டு (பேரூர்புராணம், திருநாட்டுப்படலம் 7) வினைத்தொகை. இந்திரன் தன் மேகத்தையும் வானவில்லையும் அணிவிக்கிறான் என்றவாறு.

உடம்பெல்லாம் வாயாய்ப் பிறர்க்குப தேசம்
ஓதினேன் அல்லதென் உளத்துள்
நடம்பயில் உனது திருவடித் துணைகள்
நாடிலேன்; எந்தவா றுய்வேன்?
இடம்பெறு மேனி யிடம்பொலி பணியாய்
இலங்கல்போல் இயல் இடம் எங்கும்
விடம்பொலி பணிகள் விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 34

11. அல்லது - அல்லாமல். இடம் பெறு - (மலையாதலால்) மிகுந்த இடத்தைப் பெற்ற, விசாலமான. மேனியிடம் - உடலின்கண். பணியாய் - அணிகலன்களாக. இலங்கல்போல் - விளங்குவதைப் போன்று. இயல் இடம் எங்கும் - இருக்கின்ற இடங்கள் எல்லாவற்றிலும். விடம் பொலி - நஞ்சு நிறைந்த. பணிகள் - பாம்புகள். ''விலங்கல் உருவத்தும் விலகாமை விடநாக அலங்கல் தழுவிக் கவினியாங்குவளர் சந்தின் குலம்கதுவு சூழல் குடி கொண்டு சுடிகைக்கண் இலங்கும் மணிநாகம் இனிதாடுவன கண்டான்'' என்பது தலபுராணம் (நாரதன் வழிபடுபடலம் 10).

காமனை விழித்த கண்ணும்அந் தகனைக்
கதத்துடன் உதைத்தபூங் கழலும்,
பூமனைச் சரம்கொய் கரமும்என் சிந்தை
பொருந்திடில்ப் பவம்பொருந் துமதோ?
காமர்தண் டலையில்ச் செறிதரு சந்தம்
கார்அகில் உராய்ந்தெழு கனலால்
வேம்மணம் எங்கும் விரிந்தென் கயிலை
வித்தகா! சந்திநா யகனே! 35

12. விழித்த - பார்த்து எரித்த. அந்தகனை - இயமனை. கதத்துடன் - இனத்துடன். பூமன் - மலரவன், பிரமன். பவம் - பிறவி, பாவம் எனினும் ஆம். வினா எதிர்மறை. காமர் - அழகிய. தண்டலையில் - சோலையில். சந்தம் - சந்தனமரம். வேம் - வேகின்ற. ஒப்பு : ''அறைபடு சந்தம் கார் அகில்ப்புகைதிக்கு அனைத்திலும் கலந்து விண்பாலும் நறைகமழ் காரைமடை'' (காரைமடை ஸ்ரீ ரங்கநாதமாலை 87).

வார்த்திகப் பருவம் நெருங்கிய ததன்பின்
வருவது மரணம்;மற் றதனைத்
தீர்த்திரட் சிக்கும் செய்கைநிற் கல்லால்த்
தேவர்கள் தமக்கும்முற் றுவதோ?
கார்த்திரள் வெருவப் பிளிறுகுஞ் சரங்கள்
கான்றிடு கடம்தருக் கணம்கொள்
வேர்த்திடர் பறித்து விழுத்துதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 36

13. வார்த்திகப் பருவம் – முதுமை. அதனை என்றது சாவினை. தீர்ந்து – நீக்கி. இரட்சிக்கும் – பாதுகாக்கும். முற்றுவதோ – இயலுவதோ. கார்த்திரத் – மேகக்கூட்டங்கள். வெருவ – அஞ்சும்படி. குஞ்சரங்கள் – யானைகள். கான்றிடு – ஒழுக்குகின்ற, பொழிகின்ற. கடம் – மதநீர். தருக்கணம் கொள் – மரக்கூட்டங்களின். வேர்த்திடர் – வேரை அணைத்துள்ள மண்மேட்டினை. விழுத்து – மரங்களை விழச் செய்கின்ற. மதநீரின் மிகுதியால் மரத்தின் வேர்களுக்கு ஆதாரமான மண் பறிக்கப்பட்டு அவை விழுகின்றன.

இடைஅற உன்னைப் பாடி,ஆர் அழல்சார்
இழுதென நெஞ்சம் நெக்குருகித்
தடைஅற இருகண் நீர் சொரிந் துன்னைத்
தரிசனம் செய்யஎன் றருள்வாய்?
அடைவுற அண்ட கோடிகள் எல்லாம்
அம்புய வாய்கொடுண் டருள்மால்
விடைமிசை ஊர்ந்து விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 37

14. இழுது என – நெய்யைப்போல. என்று – எந்நாள். அடைவுற – முற்றிலும் அடங்கும்படி. அம்புய – தாமரை போன்ற. வாய்கொடு உண்டு அருள். மால்விடை – திருமால் ஆகிய இடபம், திருமாலும் விடைவடிவில் இறைவனைத் தாங்கினார் என்ப.

கான்அலர்த் திரளும் புனலும்நின் மீதில்க்
காட்டியும் கருத்திலன் ஆகி
நான்அபி டேகித் தர்ச்சியேன்; அவமே
நமன்றனக் கஞ்சினன் இருந்தேன்;
வானவர் சித்தர் அன்றிமா னிடர்தாம்
மருவிடா இருகயி லையினும்
மேல்நலம் தாங்கி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 38

15. கால் - மணம் மிக்க. அலர்த் திரளும் - மலர்இனங்களையும் புனலையும் - தண்ணீரையும். நின் மீதில் - மலை வடிவாகிய தேவரீரின் மேலேயே. அஞ்சினன் - அஞ்சி, முற்றெச்சம், கயிலைகள் மொத்தம் மூன்று. வடகயிலை தூயநீர்க் கடல் அருகேயும் இடைக்கயிலை இமாலயத்திலும் உள்ளன. இவை இரண்டும் மனிதர்களுக்கு எட்டாதவை. வெள்ளிமலை தென்கயிலை ஆகும். இது அணுகுதற்கு எளியது. ''உத்தர கயிலை என்றும் தக்கிண கயிலை என்றும் மத்தியில்க் கயிலை என்றும் வழங்கிடும் கயிலை மூன்றாம்; உத்தர கயிலை சுத்தோ தகக்கடல்ப் பால தாகும்; மத்தியில்க் கயிலை ஈது மாடக வீணை வல்லோய்!'', ''தெக்கிண கயிலைகன்மம் செயத்தகு பரத கண்டத்து எக்கடவுளரும் போற்ற எழில்வளர் கொங்கு நாட்டில் தக்கமேல்த் திசையின் எல்லை முடிவினில்த் தயங்கா நிற்கும்.'' ''அருந்தவப் பேறு வாய்ந்த அமரர்கள் முனிவர் அன்றித் திருந்தளவ்வுயிரும் இன்பம் தெவ்வுதற் கெளிய அல்ல இருத்திடு வடபால்க் குன்றும் இடைப்படு குன்றும் என்னா'' (பேரூர்ப் புராணம் - புராண வரலாற்றுப் படலம் 41 - 43). மேல் நலம் - மிக்க பயன்

பூமிசை வேதன் படைத்தலுத் தனன்; மால்
புரந்தயர்ந் துறங்கினன்; கூற்றன்
தோம்இசை எனதா வியைப்பிடித் திளைத்தான்;
துயர்இவர் அறஎனைப் புரப்பாய்
பூமிசை வீழ்ந்து வணங்கிடும் உயிரைப்
புலவர்பூப் பொழிந்திடக் கயிலை
மீமிசை அமைக்க விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 39

16. பூமிசை வேதன் - தாமரைமேல் உள்ள பிரமன். புரந்து - காப்பாற்றி. அயர்ந்து - சோர்வடைந்து. கூற்றன் - இயமன். தோம் இசை - குற்றம் பொருந்திய. இந்த மூவரும் தம் வருத்தம் தீருமாறு அருள் என்று சாதுரியமாகத் தனக்குப் பிறவாமையை வேண்டுகிறார். பூமிசை - நிலத்தில். புலவர் - தேவர்கள் மீமிசை - மேல், ஒருபொருட்பன்மொழி. கீழே விநாயகர் பதிகத்திலும் (தொடர் என் 9) இக்கருத்து இடம்பெற்றுள்ளது.

புன்மலக் கூட்டுள் அயரும் என் உயிரும்
புள்ளினை வினைத்தடை போக்கி,
உன்மலர்க் கழல்ஆம் பரவெளி தன்னில்
உலவிட விடுக்கும்நாள் உரையாய்;
கொன்மலி சுரரைப் பார்த்து ''நம் பரனைக்
கும்பிட வம்மின்''என் பனபோல்
மென்மலர்ச் சினைகள் அசைந்ததென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 40

17. புன் - இழிந்த. புள் - பறவை, உருவகம். வினைத்தடை - இருவினைகள் ஆகிய தடை. கழல் - திருவடி. கொன்மலி - பெருமைமிக்க. சுரரை – தேவர்களை. பரனை – சிவபிரானை. மலர்ச் சினைகள் – பூக்களை உடைய கொம்புகள்.

மதப்பயல் மதத்தால் நினக்கமைத் திடும்என்
மனத்தளி யிடைமட வாரைக்
கதத்துடன் இருத்த எண்ணினான்; முந்நாள்க்
கதைமறந்தனன்; நினைப் பூட்டாய்;
சதக்கிருத் அனந்தர் பார்த்துநாக் கொண்டு
சாற்றினும் முற்றுறாத் தகைசால்
விதத்திவிம் மிதம்கொண் டிலங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 41

18. மதப்பயல் – கீழான மன்மதன். மதத்தால் – தன் செருக்கால் (நான்) நினக்கு அமைந்திடும் என்க. மனத்தளி - உள்ளக்கோயில். மதப்பயல் எண்ணினான். கதை - உடல் எரிந்து போன வரலாறு. சதக் கிருத் அனந்தர் பார்த்து - (ஆயிரம் கண்களை உடைய) இந்திரர்கள் எண்ணற்றோர் தம் விழிகளாற் கண்டு, நூறு அசுவமேதயாகம் செய்தவன் என்னும் பொருளில் இந்திரன் சதக்குத் என வழங்கப்படுவான். அனந்தர் அனந்தர் நாக்கொண்டு சாற்றிலும் (ஆயிரம் நாக்குகளை உடைய) ஆதிசேடர்கள் பற்பலர் தம் நாக்குகளால் உரைத்தாலும், சதக்குத் பார்த்து அனந்தர் சாற்றினும் நிரனிறை. விம்மிதம் - வியப்புக்கள். பேரூர்ப் புராணத்தில் விம்மிதப்படலம் என்றே ஒரு தனிப்பகுதி உள்ளது.

வரையொணா தென்ன மறைசொல்நின் வடிவம்
வரைஎன நிற்பினும் அயன்மால்
கரைஅற முயன்றும் கண்டிலர் எனில்உன்
கருணையால் அன்றிமுற் றுவதோ?
தரையில்வாழ் மாந்தர் தமக்குமெய் வீடு
தரும்தருக் குலவிடும் என்பால்
விரையவம் மின்என வழுந்துதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 42

19. மறை – தமிழ்வேதமாகிய தேவாரம். ''இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே (6-97-10) என்னும் அப்பர் வாக்கை நினைந்து கூறியது. வரைஎன – மலையாக. என்னை வரைவாயாக என்பது தொனி. கரை அற – எல்லை இல்லாமல். மெய்வீடு – உடல் தங்கி இருபதற்கான இல்லம். தரு – மரங்கள். விரைய – விரைவில் இரட்டுற மொழிதலாக, ''மெய்வீடு தரும் (நிலையான முத்தியை அளிக்கும்) தருக்கு (பெருமிதம்) உலவிடும் என்பால்'' என்றும் கொள்க.

புரணஆ னந்த வடிவன்நீ உறநின்
பொன்னடித் தொண்டன்யான் சனன
மரணவா தனைப்பட் டுழல்வது நீதி
வழக்கதோ? அருள்க்குள மரபோ?
பரணஆ காய வீதியில்ப் படரும்
பனிமதி யினதுரு நாப்பண்
விரணம்ஆற் றிடுகான் உயர்ந்ததென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 43

20. புரண – பூரண, முழுமையான. ஆனந்த – இன்ப. உற – இருக்கும்போது. வினாக்கள் எதிர்மறை. பரண – (திங்களைத்) தாங்குகின்ற. பணி மதியினது – குளிர்ந்த சந்திரனின். உருநாப்பண் – வடிவத்திற்கு நடுவே உள்ள. விரணம் – (களங்கமாகிய) புண்ணை. ஆற்றிடு – போகச் செய்கின்ற கான் – (மருந்துப் பயன்மிக்க) காடுகள்.

இலவுறு கனிதுய்த் துறுபசி ஒழிப்பான்
எய்க்குநர் போலமங் கையராய்
நலம்உறக் கருதும் மடமையேற் கருள்மெய்ஞ்
ஞானம் ஈந் துனைத்தொழுப் புரிவாய்;
பலர்புகழ் பரிதி வானவன் நேரே
படர்தரா துத்தரம் தெற்கில்
விலகல்செய் தயனம் காட்டுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 44

21. இலவு காத்த கிளி என்பது பழமொழி. எய்க்குநர் – ஏங்கி மெலிபவர். மடமையேற்கு – அறியாமையை உடைய அடியேனுக்கு. ஈந்து – வழங்கி. பரிதிவானவன் – சூரிய பகவான், இருபெயரொட்டு. படர்தராது – நடக்காமல். உத்தரம் – வடக்கு. உத்தரத்திரனுலும் தெற்கிலும் என எண்ணும்மை கூட்டுக. அயனம் – 6 மாதங்கள் கொண்ட கால அளவு. உத்தராயணம், தட்சிணாயனம் என இரண்டு.

மும்மலப் பகையால் நரகம்மண் சுவர்க்கம்
மூன்றினும் சுழன்றயர் வேனைச்
செம்மலர்ப் பாத வீட்டமைத் திடநீ
திருஅருள் புரிவதென் றுரையாய்;
கைம்மலை முகற்கார் மலைமலை சூரைக்
கடிந்தசெம் மலைஅளித் தருளி
மெய்ம்மலை வடிவா விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 45

22. நரகம் – பாவச் செயல்களுக்குத் தண்டனை நுகரும் துன்பமயமான இடம். மண் – நிலஉலகம், புண்ணிய பாவங்களுக்கு ஏற்ப இன்பதுன்பங்களைக் கலந்து துய்க்கும் இடம். சுவர்க்கம் – நல்வினைகளின் பயனாக இன்பங்களை மட்டும் அநுபவிக்கும் மேல் உலகம். பாத வீட்டு – திருவடிகளாகிய முத்திநிலையில். என்று – எந்நாள். கைமலை – துதிக்கையை உடைய மலை, யானை, இப்பொருள் உவமை. யானை முகனையும் என உம்மை விரிக்க. கார்மலை மலை – கரியநிறம் பெற்ற மலையைப் போன்று பேருருவம் பெற்ற, அரக்கர்கள் கருப்பானவர்கள் என்பர், ''பாவ நிறத்தின் தாருகவர்க்கம்'' என்பது திருப்புகழ் (600). செம்மலை – பெருமைமிக்க முருகப் பெருமானையும், எண்ணும்மை விரிக்க. பின்னிரண்டடிகளில் மலை என்ற சொல் ஐந்து முறைபயின்றது சொல்பின் வருநிலை. கார்மலை செம்மலை – முரண்தொடை.

குருவடி வாக வந்தென துள்ளக்
கோயில்கொண் டருளும்நின் ஞானத்
திருஉருக் கண்டு களிக்கமா மாயைத்
திரைஒழித் தருளும் நாள் என்றோ?
கருமுகில் அலைக்கும் கமுகுறு குரண்டம்
கலங்கிடக் ககனம்ஆர் கதிர்மீன்
வெருளுறப் பாய்சேல்த் தடத்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 46

23. வந்து எனது. முகில் – மேகத்தை. கமுருஉறு குரண்டம் – பாக்கு மரத்தில் இருக்கும் கொக்கு. ககனம் ஆர் – வானில் உள்ள. கதிர்மீன் – ஒளிமிக்க விண்மீன்கள் உத்திரநட்சத்திரம் எனினும் ஆம். வெருளுற – அஞ்சும் படியும். கலங்கிட, வெருளுற ஆகிய ஈரிடங்களிலும் எண்ணும்மை விரிக்க. சேல்த்தட சேல்மீன்கள் நிறைந்த நீர்நிலைகளைப் பெற்ற.

சரதபூ ரணநின் வடிவினை உன்னித்
தரிசனம் புரிசெயல் மறைத்துக்
கரவுறும் உலகை மெய்எனக் காட்டிக்
கலக்கும்வல் வினைஅறக் கருதாய்;
நரர்விழிக் கொருகல் மலைஎனத் தோற்றி
நாரதா தியமுனி வரற்கு
விரவருள் உருவா விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 47

24. சரத – நிலையான, அழிவற்ற. உன்னி - தியானித்து. மறைத்து – உள்ளதை மறைக்கும் மாயை, ஆவரணம். கரவுஉறும் – பொய்யான. காட்டி – இல்லாததை இருப்பதைப் போலக் காட்டும் மாயை, விட்சேபம். வினைகளின் பயனாகவே மாயை தோன்றுதலின் அதுவினையின் செயலாகவே கூறப்பட்டது. நரர் விழிக்கு – மக்களின் கண்களுக்கு, தோற்றி – காட்சியனித்து. நாரத ஆதிய – நாரதர் முதலிய, தீர்க்க சந்தி. அருள்விரவு உருவா என மாறுக.

நத்தரும் பொருள்கள் உடன்உடன் நல்கும்
நாத!நீ உளத்துறல் கருதேன்
பித்தனாய் உலகப் பொருள்விழைந் தவமே
பெருங்கடல் கானகத் துழன்றேன்;
சித்தமீ துன்னும் தவத்தரை உதிப்பில்
சின்மயா னந்தவான் தலத்தில்
வித்தருள் வடிவா விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 48

25. நத்த அரும்பொருள்கள் – முழுமையாக உணர்ந்து விரும்புவதற்குக் கூட அரியவையாகிய ஞானம், பக்தி, வைராக்கியம், முத்தி போன்றனவற்றை. ''வேண்டத் தக்கது அறிவோய் நீ'' என்பது மணிவார்த்தை (33:6) இதனால் யாம் அறியோம் என்பது அருந்தாபத்தி. அதையே நத்த அரும்என்றார். ஆசையாகிய கடலிலும் அறியாமையாகி கானகத்திலும். உன்னும் – தியானிக்கும், இதுவே தவம். உதிப்பு இல் – மறுபிறவி அற்ற சின்மய ஆனந்த வான்தலத்தில் ஞானமயமாகிய பேரின்ப நிலையாகிய சிதாகாசப் பெருவெளியில். வித்து – விதைக்கின்ற, பெயரெச்சம், வடிவாக என முடிகின்றது. (25)

இன்னம்எத் தனைஆர் உயிர்இனம் சேய்என்று
எனைக்கொள விடுப்பைகொல், அன்றி
நின்அரும் சுதன்என் றெடுத்தெனை முந்தி
நிமலவீ டளிப்பைகொல், அறியேன்;
பொன்அவிர் உதயாத் தமனவெற் பென்னப்
பொலிகரத் தால்உல கிருளை
வெல்நலச் சுடர்ப்பந் தாடுதென்கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 49

26. சேய் என்று – குழந்தையாக ''செல்லாஅ நின்ற இத் தாவர சங்கமமத்துள் எல்லாப்ப பிறப்பும் பிறந்திளைத்தேன்'' (திருவாசகம் 1-30, 31) என்பது பற்றி உயிர் இனம் என்றார். இக்கருத்தைப் பட்டினத்தார் விளக்கமாக, ''நிகிலமும் தோன்றநீ நினைந்தநாள் தொடங்கி எனைப்பல யோனியும் நினைப்படும் பேதத்து யாரும் யாவையும் எனக்குத் தனித்தனித் தாயர் ஆகியும் தந்தையர் ஆகியும் வந்திலாதவர் இல்லை; யான்அவர் தந்தையர் ஆகியும் தாயர் ஆகியும் வந்திராததும் இல்லை'' என்பார். (திருக்கழுல மும்மணிக்

சோலை-7). அகல் - பகல். நிமல - குற்றமற்ற. உதய வெற்பு - கீழ்மலை. அத்தமலவெற்பு - மேல் மலை. உதயாத்தமனம் - நித்தநித்தி. இருளைத் தோற்கடிக்கின்ற நன்மைமிக்க ஒளியாகிய சூரியனைப் பந்து போல் ஆட்டுகின்ற கைகளை உடையது தென்கயிலை என்றவாறு.

கற்பனை மதுரச் சொற்பொருள் அணிஆர்
கவிஅவை வரப்பொழிந் துவது
பொற்பதத் தணியப் புரிந்தவை முற்றும்
புரப்பது நின்பரம்; எந்தாய்!
பொற்பமை நமது குலத்தினுக் குரிமை
பொருந்துநல் மாமலைஎன் றிமய
வெற்பரசன் மகளைக் கொண்டதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 50

21. மதுர - இனிமையான. இதனை இடைநிலைத் தீபகமாக கற்பனை, சொல்லணி, பொருளணி ஆகிய மூன்றுடனும் கூட்டுக. புரப்பது - பாதுகாப்பது. பரம் - பொறுப்பு. நமது குலம் என்றது வெள்ளியங்கிரி மலைவடிவான மரபு. இமவான் மடந்தையைக் கைப்பிடித்ததற்கு மலையாகிய தம் குலத்தைச் சேர்ந்தவள் என்பதால் எனக் காரணம் ஒன்றைக் கற்பித்ததால் ஏதுத் தற்குறிப்பேற்ற அணி.

காலனுக் கச்சம் அளிக்கும்வெண் நீற்றுக்
கவசமும் கண்டிகை அணியும்
சீலம்என் றணியேன்; மானிடர்க் கஞ்சச்
செயும்பணி தேடினன் திரிந்தேன்;
ஞாலம்ஆர் மலையில் வேற்றுமை உறாது
நயக்கும்அல் வழியில்த் தன்குறியே
மேல்அமைந் தோங்க விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 51

22. கவசமும் - காப்பும். கண்டிகை அணியும் - உருத்திராக்கம் ஆகிய அணிகலனும். சீலம் - சைவ ஒழுக்கம் என்னும் நினைவுடன். மானிடர்க்கு என்புழி நான்கன் உருபு இரண்டன்பொருளில் வந்தது. தேடினன் - தேடி, முற்றெச்சம். வெள்ளியங்கிரி பார்ப்பதற்கு உலகத்தின் பிறமலைகளைப் போலவே - வித்தியாசம் இன்றி - உள்ளது. ஆனால் இறைவனை வேறாகக் கருதாமல் விரும்பும் பக்தி

நெறியில். தன் குறியே – சிவபெருமானுடைய சிவலிங்க வடிவமே, ஏகாரம் பிரிநிலை, மலையை விளக்குகிறது. வேற்றுமை, அவ்வழி என இலக்கணக் கலைச் சொற்கள் தொனிக்கின்றன. (28)

வேதம்எட் டரிதாய் நாவலூர்க் கோன்பா
விருப்பில்ஆ ரூர்த்தெரு உழன்ற
பாதபங் கயம்என் சிரமிசை சூட்டிப்
பவம் இறப் பொழிந்திடப் பாராய்;
போதனோ டகிலாண் டத்திரள் யாவும்
பொன்றுறும் ஊழிகா லத்தும்
வீதல்அற் றோங்கி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 52

29. "ஆரணம் முறையிட் டின்னும் அளவிடற் கரிய முக்கட் பூரணர்" என்பது தலபுராணம் (கௌரி தவம் புரிபடலம் 30) நாவலூர்க்கோன் – சுந்தரமூர்த்தி நாயனார். "படிஇலா நின்பாட்டில் ஆரூர! நனிவிருப்பன் பரமன் என்பது அடியனேன் அறிந்தனன்; வான் தொழும் ஈசன் நினைத்தடுத்தாட் கொண்டும் அன்றித் தொடிஉலாம் மென்கைமட மாதர்பால் நினக்காகத் தூது சென்றும்" (நால்வர் நான்மணி மாலை 3). பவம் – பிறப்பு. போதனோடு – பிரமனுடன். அகில அண்டத்திரள் – எல்லா உலகங்களிலும் உள்ள உள்க் கூட்டங்களும். பொன்றுறும் – அழிந்து போகின்ற. வீதல் – அழிதல். வெள்ளி மலையும் திருப்பேரூரும் பேரூழியிலும் அழியாதவை என்பதைப் பழைய தலபுராணம் (பட்டிப்புராணம் என்றும் பிறவாநெறித் தலபுராணம், இதுவரை அச்சாகாதது)" அண்ணலது உருவம் போல அரும்பிறப்பு இறப்பு இல்லாமல் நண்ணிடும் என்று வேதம் நவின்றிடும். அதற்குச் சான்று அங்கு உள்நிறைந்து என் இறந்த உயர்தகை விளக்கா நிற்கும் தண்நிழல் தரும் இரண்டு தாவரம் உளதாம் அன்றே". (காமதேனுச் சருக்கம் 41) எனச் சுட்டுகிறது.

புண்புழு விரும்பும் புள்ளனத் துன்பப்
பொய்உடல் விழைந்தவத் துழல்வேண்
இன்புருப் பொலிநின் திருவடித் தொண்டர்
எய்தருள் ஏதுகொண் டடைவேன்?
கொன்புலி பரித்த பணியினை விரலிற்
குலவுசிற் றாழியாப் புனைந்த
மின்புணர் கருணை வெற்ப!தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 53

30. புன் - இழிந்த. புள் என - பறவையைப் போல. அவத்து - வீணாக. உழல்வேன் - உழலும் நான், வினையாலலையும் பெயர். எய்து அருள் - பெறுகின்ற திருவருளை. ஏதுகொண்டு - எப்படி. கொன் - பெரிய. புவி பரிக்க பணியினை - உலகைத் தாங்குகின்ற பாம்பாகிய ஆதிசேடனை. சிற்றாழி - சிறியமோதிரம். மின் - இறைவி. ''புவியோ அரவினுக்கு ஒருதலைப் பாரம்; அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்; உமையோ இறைவர் பாகத்து ஒடுக்கம்'' என்பார் ஒளவையார் (தனிப்பாடல் : பெரியது கேட்கின்).

பழிபவம் விளையும் பூமிஆம் மடவார்ப்
பார்த்துரு குற்றஎன் மனம்நின்
செழியமென் மலர்ப்பொற் சேவடி நினைந்தச்
செயல்பெறு தினம்எது? செப்பாய்;
இழிவுறு சமய வாதிகள், தருக்கர்,
இகலுலோ காயதர் தாமும்
விழிகொடு காண விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 54

31. பழிபவம் - அவமானமும் பாவமும் உம்மைத்தொகை, இனி வினைத் தொகையாக்கிப் பழிக்கப்படுகிற பிறப்பு எனினும் ஆம். செழிய - வளப்பம் மிக்க. அச்செயல் என்றது உருகுதலை. இகலு - போரிடுகின்ற. லோகாயதர் - இறைவன், ஆன்மா, வினை ஆகியவற்றை ஏற்றுக்கொள்ளாமல் உலக இன்பமே தலைமை வாய்ந்தது எனக் கூறும் பொருள் முதல்வாதிகள். தாமும் இழிவு சிறப்பும்மை. இறைவன் மலைவடிவமாக எல்லோரின் ஊனர் கண்ணிற்கும் புலப்படுமாறு நிற்றலை நினைந்து கூறியது.

நலம்கிளர் நீஎன் னுள்மலர் மணம்போல்
நண்ணவும் நாடிலேன்; வினையால்
மலங்கினேன்; தேற அஞ்சல்என் றொருசொல்
வழங்கிஆட் கொண்டிட மதியாய்
தலம்கிளர் வான்சார் கோள்எலாம் முடியைத்
தாண்டிடா தகன்றுசூழ் தலினால்
விலங்கல்என் றிடுபேர் ஏற்றதென் கயிலை
வித்திகா! சத்திநா யகனே! 55

32. நாடிலேன் - அடைய முயலவில்லை. தலம்கிளர் - இடம் அகன்ற வான்சார் - ஆகாயத்தில் உள்ள. கோள் - கிரகங்கள். முடியை -

செருந்தை. அகன்று – விலகி. சூழ்தலினால் – சுற்றுவதால். விலங்கல் – மலை, விலகிப் போக வைக்கும் ஒன்று. (32)

சின்மயா னந்தக் கடல் முகந் தெழுந்த
செழுமுகில் எனக்கவி பொழிந்து
கல்மனம் கரையக் கண்கள்நீர் உகுத்துள்
காட்சிகண் டேத்தஎன் றருள்வாய்?
என்மறை தரத்தோற் றிடுதுணங்கறலை
இலங்குசோ தித்திரு விழியால்
வில்மதன் கடுப்ப எரிக்கும் தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 56

33. சின்மய – ஞானமயமான. ஆனந்த – பேரின்பம் நிறைந்த முகில் என – மேகத்தைப் போல. ஏத்த – போற்றுவதற்கு. என்று – எந்நாள். எல் – சூரியன். துணங்கறலை – இருட்டை. இலங்கு சோதி – பிரகாசிக்கின்ற பேராளியை. தருவிழியால் – உண்டாக்குகின்ற கண்களால். கடுப்ப – போல காமனை எரித்ததைப் போல ஞானத்தை மறைக்கும ஆணவமாகிய இருளையும் இறைவன் எரிக்கிறான் என்பது கருத்து. இனி சோதிமரம் ஆகிய கண்ணால் இருளை நீக்குகின்ற எனினுமாம். சோதிமரம் பற்றி மேலே கூறப் பெற்றுள்ளது. சோதித் தரு விழி உருவகம்.

இகல்படு காலன் இருள்உடல் மீதில்
இருந்தும்நின் தாள் துணை அடியேன்
துகள்அறப் பலகால் இரந்தும்என் இரமேல்ச்
சூட்டிட இரங்கிலை ; என்னே ?
திகழ்கரி முகன்அம் குறிஞ்சிவேந் துவகை
சிறந்துமேல் இவர்ந்தனர் ஆட
விகசித வரையா விளங்குதென் கயிலை
வித்தகா ! சத்திநா யகனே ! 57

34. இகல்படு – பகைக்கும் இயல்பினை உடைய. இருள் – கரிய. துகள் – மலங்கள். அம்குறிஞ்சி வேந்து – அழகிய குறிஞ்சிக் கிழவனாகிய முருகப்பெருமான். நம் எனினும் ஆம், "நம் செந்தில் மேய வள்ளி மணாளன்" என்பார் அப்பர். (தேவாரம் 6-23-4). இவர்ந்தனர் – ஏறி, முற்றெச்சம், விககித – மகிழ்ச்சியால் மலர்கின்ற.

காடமைத் துறுவீ டேகெனச் சாற்றும்
காலம்எய் தியும்கருத் திடைமூ
ஏடணை ஒழித்துன் திருவடித் துணைகள்
எண்ணிலேன் கண்இலேன்; அந்தோ!
மீடல்இல் அன்பார் திண்ணன்வாய் அமுத
வேட்கைமிஞ் சலின்இனம் இசைந்த
வேடர்தம் மிகைகொண் டிலகுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 58

35. விடு ஏகு என. ''காடு வாவா என்கிறது; வீடு போபோ என்கிறது'' என்பது பழமொழி. காடு - கானகமும் சுடலையுமாம். மூ ஏடணை - மூவாசை, மண், பெண் பொன். கண் இலேன் ஆகிய நான் எண்ணிலேன், கண் - அறிவு. மீடல் இல் - மீளுதல் இல்லாத, திரும்பாத. திண்ணன் - கண்ணப்ப நாயனார். ''அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பு என்றும்'' (பெரியபுராணம், கண்ணப்ப. 157), மிஞ்சலின் - அதிகமானதால். இனம் இசைந்த - அவருடைய மரபிற்குப் பொருந்திய. வெள்ளியங்கிரியில் வேடர்கள் அதிகமாக இருப்பதற்குக் காரணம் கற்பித்தவாறு.

காந்தம்வல் இரும்பை ஈர்த்தலில்க் கருத்தைக்
கவர்வது நின்கழல் ஆக்கி
வாய்ந்தயாக் கையினில் ஒன்றல்போல் நின்மெய்
வடிவினில்ப் புணர்ந்துறப் புரியாய்;
சாந்தம்நா றிடுகூ விளத்திருக் கவிகட்
சமர்கடத் தருந்துணை எனவிண்
வேந்தன்உள் உவப்புற் றேத்துதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 59

36. ஈர்த்தலில் - கவருவதைப் போல. தேவரீரின் திருவடிகள் அடியேனின் கருத்தைக் கருத்தைக் கவருமாறு செய்து. ''காந்தம் நேர்படும் ஊசியில்ச் சிவலிங்கக் கடவுள் தன் திருமுன்னர் போந்த நாரதன் புந்திபோய் அருள்மலைபுக'' என்னும் தலபுராணப் பாடலின் (நாரதன் வழிபாடு படலம் 23) எதிரொலி இது. வாய்ந்த - (இப்போது எனக்கு) வாய்த்துள்ள. யாக்கையினில் - உடலின்கண். ஒன்றல்போல் - உயிர் வேறு உடல் வேறு என்னும் உணர்வின்றி அத்துவிதமாகக் கலந்திருப்பதைப் போன்று. புணர்ந்துற - இரண்டறக் கலக்க.

சுழிபடு நீர்போல் மெய்அறி வனைத்தும்
　　சூறைகொண் டிடுபடு மாயைக்
குழிவிழுந் தயர்வேன் என்னைமெய் அன்பர்
　　கொண்டபேர் இன்புறத் திருத்தாய்;
செழியஆ காயம் தன்பெரு வடிவில்த்
　　திகழும்எண் அற்றதா ரகைஆம்
விழிகொடு நோக்க விளங்குதென் கயிலை
　　வித்தகா! சத்திநா யகனே! 60

7. சுழிபடு - சுழல்கின்ற. சூறை கொண்டிடு - கொள்ளை கொண்டு விடுகின்ற. படு - தனக்குள் அகப்படுத்திக் கொள்கின்ற பிறவினைப் பொருளில் வந்த வினைத் தொகை அடி. அயர்வேன் - மனம் சோர்கின்றவனாகிய நான். திருத்தாய் - தவறுகளை நீக்கிச் செம்மைப்படுத்துவாய். செழிய - செழிப்பான. தாரகை ஆம் - நட்சத்திரங்கள் ஆகிய.

மகம்கலந் திட்ட சனியில்என் உயிரை
　　வருத்தும்ஆ ணவவலி ஒழித்தே
சுகம்கலந் திட்ட நின்அருள்ப் புரண
　　சொருபமோ டொன்றுறப் புரியாய்;
நகம்கலந் திட்ட மாதுகந் தரத்தில்
　　நண்ணிய குரல்சொல்என் றுவந்து
விகங்கவர்க் கம்செய் ஒலிகொள்தென் கயிலை
　　வித்தகா! சத்திநா யகனே! 61

38. மகம் கலந்திட்ட சனியில் - மக நட்சத்திரத்தில் புகுந்த சனிக்கோளைப் போன்று, ''மகத்தில் புக்கதோர் சனி எனக்கு ஆனாய்'' என்பார் நாவல்ஆரூரர். (தேவாரம் 7-54-9) புரண - பூரண, முழுமையான, நகம் கலந்திட்ட மாது - மலைமகளாகிய பார்வதி. கந்தரத்தில் நண்ணிய - கழுத்தில் பொருந்திய உவந்து. விகங்கவர்க்கம் - பறவை இனம். மகளிர் கலவிக்காலத்தில் எண்வகைப் புள்ளொலி எழுப்பி மகிழ்விப்பர் என்பது இலக்கிய மரபு. ''அரிகுயில் மஞ்ஞை செம்போத்து அனம்புறாக் காடை கோழிக் குரல்என ஒலிசெய்வித்துக் கூடும்உள் இன்பம் ஓங்க'' என்பது சீகாளத்திப்புராணம் (நான்முகச் சருக்கம் 18)

''விம்மிய தவம்புல் குயில்ச்சுகம் கோரும்
விலர்காள்! இவற்றிடை அமைந்த
எம்இடைச் சிறுமை தேர்திர்''என் றுணர்ந்தும்
ஏழையர் மால்ஒழித் தருள்வாய்;
செம்இயல்ச் செடியில்க் கொடியினில் குகையில்ச்
சிலையினில்ச் சரசுக ளிடத்தில்
விம்மிதம் பலகொண் டிலகுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 62

39. ஏழையர் மால் - மங்கையர் காதல். செம் இயல் - செம்மையான தன்மையைக் கொண்டுள்ள. சிலை - கல். சரசு - குளம். விம்மிதம் - வியப்பு. ''குருமலி நவமணியின் குவடுகள் பலநின்ற மருவுசிந் தாமணியின் வளத்தன உலம்எல்லாம் தருஎன மரம் எல்லாம் தழைஒளி இழைதருவ கருவளர் கொடி எல்லாம் காமர்வல் லியின்வாய்ந்த'' என்னும் தலபுராணப் பாட்டின் (காமதேனு வழிபாடு படலம் 46) நினைப்பு இது.

அளக்கரில் நதியில் நனைந்துல கெங்கும்
அலைந்தன னன்றிநின் அடிஎன்
உளக்கம லத்தில் இருத்திஉள் ஒளிக்குள்
ஒளிக்கும்ஓர் உபாயம்ஓர்ந் தில்லேன்;
துளக்கம்ஆர் மணிச்சூட் டராஇனம் வரையில்ச்
சூர்அர மகளிர்வைத் திட்ட
விளக்கம்ஒத் திரவை விலக்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 63

40. அளக்கரில் - கடலில். இருத்தி - நிலை நிறுத்தி. உன் ஒளிக்குள் - ஆன்மப்ரகா சத்திற்குள். ஒளிக்கும் - ஒளிந்துகொள்ளச் செய்யும். உபாயம் - வழியை. ஓர்ந்தில்லேன் - உணர்ந்தேன் இல்லை. ''கோடி தீர்த்தம் கலந்து குளித்துஅவை ஆடினாலும் அரனுக்கு அன்பு இல்லையேல் ஓடும் நீரினை ஓட்டைக் குடத்துஅட்டி மூடிவைத்திட்ட மூர்க்கனோடு ஒக்குமே'' என்பது வாகீச வேதம். (தேவாரம் 5-99-9) துளக்கம் ஆர் - ஒளி பொருந்திய. மணிச் சூட்டு - மாணிக்கத்திற்கு இடமாகிய தலையினை உடைய. அரா இனம் - பாம்புக் கூட்டங்கள். சூர் அர மகளிர் - வனதேவதைகளாகிய தெய்வப்பெண்கள், இருபெயரொட்டு எனினும் ஒரு பொருட்பன் மொழி எனினும் ஆம். ஆர் என்பதற்கு அச்சத்தைத் தருகின்ற எனவும் உரைக்கலாம்.

ஓடிட உன்னி உறங்குநர் தமைப்போன்று,
உன் அருள் பெறமுயன் றறிவை
மூடிய மலத்தால் அயர்ந்தனன்; நின்கண்
முளரியால் நோக்கினை எரியாய்
கோடிய சிலைத்தேர் அம்பினை நாகக்
குலம்ஒழித் தமையும்அன் பருக்குள்
வேடியக் ககற்றி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 64

41. மலத்தால் – (இங்கு அறிவை மயக்கும்) மாயையால். முளிரியால் – தீயால். நாகக்குலம் – யானை, பாம்பு, குரங்கு ஆகிய மூன்றன் கூட்டங்கள் என முப்பொருளும் கொள்க. கோடிய சிலை (மன்மதனின்) வளைந்த வில்லாகிய கரும்பு, இதனை யானை ஒழிக்கும். தேர் – இரதமாகிய தென்றல். இதைப் பாம்பு இரையாகக் கொண்டு ஒழிக்கும். அம்பு – மலர்கள், இதைக் குரங்கு பிய்த்தெறிந்து அழிக்கும். அமையும் – வெள்ளியங்கிரிப்பால் வந்து பொருந்தும். வேடியக்கு – வேள் தியக்கு, மன்மதன் செய்கின்ற தீமை, காமம்.

உன்அருள்த் துணைத்தாள்ப் பத்தியற் றவத்துண்டு
உடுக்கும்என் னால்ப்பிற உயிர்கட்கு
இன்னலே; யான்கொள் மானிட செனனத்து
ஏனைஅஃ றினைப்பிறப் பினிதே;
மன்னல்ஆம் சோலை மழைமது முழைவாழ்
மடங்கல்ஆர்ப் புற்றிடு மடங்கல்
மின்ஆவிர் சோதிக் கொடிவிண்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 65

42. பத்தி – அன்பு. அற்று. அவத்து – வீணாக. செனனத்து – பிறவியைவிட. அஃறினைப் பிறப்பு – விலங்கு, தாவரம் முதலியன. மன்னல் ஆம் – பொருந்தியுள்ள. சோலை – பொழில்களின். மது மழை என மாறுக – தேன் பொழிவும். முழை – குகையில். மடங்கல் ஆர்ப்பு – சிங்கங்களின் கர்ச்சனையும். ஆர்ப்பு உற்றிடும் மடங்கல் – ஒலிக்கின்ற இடியும். மின் அவிர் சோதிக் கொடிவிண் – மின்னலாக விளங்குகின்ற ஒளிக் கொடியை உடைய ஆகாயம். மதுமழையும், மடங்கல் (சிங்கம்) ஆர்ப்பும், மடங்கலும் (இடி) விண்ணும் உடைய தென்கயிலை என எண்ணும்மைகளை விரிக்க.

நாள்என வரும்ஒவ் வொன்றும்மெய் உயிரின்
நண்ணிய வேர்அறுத் தொழிக்கும்
வாள்எனக் கருதிக் கூற்றுயிர் கொளும்நின்
மலர்ப்பதம் தொழமறந் துழன்றேன்;
''ஆள்'' எனத் துதிப்பார் தம்மது பிடர்மேல்
அமைந்தசண் டனை அவன் ஊர்ப்பால்
''மீள்'' எனக் கனன்று துறந்துதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 66

43. ''நாள்என ஒன்றுபோற் காட்டி உயிர்ஈரும் வாள துணர்வார்ப் பெறின்'' என்பது வள்ளுவம். (334) கூற்று உயிர்கொளும்நின் என்றது மரணபயத்தை ஒழிப்பவன் எனக் குறிப்பால் உணர்த்துதலின் கருத்துடை அடை. ஆள் – ஆள்க்கொண்டு பாதுகாப்பாயாக. பிடர்மேல் – முதுகில். சண்டனை – இயமனை. கனன்று – சினந்து. தென்கயிலை இயமபயத்தை ஒழிக்கும் என்பது கருத்து. ஒப்பு : ''அங்கயற்கண்ணி பாதத்தைக் கைதொழுதேன். தண்டிட்டடிக்கும் மறலிவந்தால் சன்னை யிட்டு, நகைத்து, ''உண்டிட் டுவா; சிறு பிள்ளாய்!'' என்றுருக் கனுப்புவனே'' (தனிப்பாடல். பலபட்டடைச் சொக்கநாதர்)

கரணம்ஐம் புலனும் பொறிகளும் மெத்தக்
கலக்கம்எய் திடப்பெரும் துயர்செய்
மரணவா தனைதீர்த் துன்திரு அடியில்
வைத்திடத் திருவருள் புரிவாய்;
வருணன்அம் தடப்பங் கயப்படி யகம்கை
மருவிடத் தென்றலாய் உறும் ச -
மிரணன்சாந் தாற்றி வீசுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 67

44. கரணம் – மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்றும் அந்தக் கரணங்கள் நான்கும். ஐம் என்றும் என்னடையை புலன் பொறி ஆகிய இரண்டிற்கும் இயைக்க, பொருள் வெளிப்பட. வருணன் – நீர்க்கடவுள். பங்கயத்தடம் ஆகிய படியகம் என்க. படியகம் – காளாஞ்சி, எச்சில் உமிழும் பாத்திரம். சமிரணன் – வாயுதேவன், காற்றுக் கடவுள். சாந்தாற்றி – விசிறி.

எரிநுகர் வீட்டுக் கோவியம் தீட்ட
எண்ணுநன் போல, வெம் கொடிநாய்
நரிநுகர் யாக்கை அலங்கரித் துன்பொன்
நாள்மலர்ப் பதம்தொழா துழன்றேன்;
கரிநுகர் வெள்ளில் போல்எதிர் அணைந்தார்
கருத்தினைக் கலக்கும்மும் மலத்தின்
விரிநுகர்ந் தருட்சீர் விளக்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 68

45. எரிநுகர் – தீயால் கதுவப்படும். வீட்டுக்கு ஓவியம். கொடி – காகம். யாக்கை – உடலை. ஒப்பு :- ''தமியேன் உடலம் நரிக்கோ? கழுகு பருந்தினுக்கோ? வெய்ய நாய் தனக்கோ? எரிக்கோ? இரை எதற்கோ? கச்சி ஏகம்பனே''. (பட்டினத்தார் பாடல்) தொழாது உழன்றேன். கரி நுகர் வெள்ளில் – யானை உண்ட விளாங்கனி, இது பழமொழி. விரி நுகர்ந்து – விரிதலை விழுங்கி, அழித்து என்றபடி. விரி முதல் நிலைத்தொழிற்பெயர்.

எட்டியின் கனியில்க் காணமிக் கெழில்பெற்று
இன்பென நுகர்ந்திடில்க் கசக்கும்
பட்டிகள் மோக வலைப்படா தருள்மெய்ப்
பத்திஞா னம்பெறப் பணியாய்;
மட்டில்சீர்க் காழி சிறைமனப் பந்தர்
மருவினர் போல்வரைச் சுடர்பாய்
விட்டில்கட் குயர்வீ டருள்செய்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 69

46. கனியில் – பழத்தைப் போல. இன்பு என – இனிமையாக இருக்கும் எனக் கருதி. பட்டிகள் – விலைமாதர். மட்டு இல் – எல்லையற்ற. காழிஇறை – திருஞானசம்பந்தர். வரைச் சுடர் – மலைத்தீ. உயர்வீடு அருள்செய்.

நாரையும் முத்தி எய்தஆண் டருளும்
நாயக! நாகவாய்ப் பட்ட
தேரையின் மூல மலவயத் தயர்என்
சிற்றுயிற் கென்றிரங் கிடுவாய்?
காரைஎட் டியதண் டலைபொலி வரையாக்
காணினும் கருணையில்க் கரைதீர்
வீரைஒத் திகலி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 70

47. நாரைக்கு முந்தி அருளியது மதுரைத் திருவிளையாடல். நாகவாய்ப்பட்ட தேரையின் – பாம்பின் வாய்த் தோரையைப் போல, இது பழமொழி. மூல மலவயத்து – ஆணவத்தின் வலிமையால். அயர் – அலமருகின்ற. என்று – எந்நாள். காரை எட்டிய – மேகத்தை அளாவிய. தண்டலை பொலிசோலைகள் நிறைந்த. வரையா – மலை எனக் கருதி. கரை தீர் வீரை – எல்லை இல்லாத கடல்.

தேன்இயல் மலர்கொண் டுனை அருச் சிக்கும்
திருந்துமெய்ப் பத்தியும், வினை சார்
ஊன்இடர்ப் பிறப்போ டிறப்பெனும் மயக்கம்
ஒழிக்கும்மெஞ் ஞானமும் உதவாய்;
''வானிடன் மலையான் எனமலை யாதிர்;
மான்இடன் ஆகும்மா னிடம்ஆம்
மேனியர் காண்மின்'' என்னும்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 71

48. வினைசார் – இருவினைகளின் விளைவாகத் தோன்றுகின்ற. ஊன் – உடல், ஆகுபெயர். இறப்பு எனும் யான் வானிடன் மலை என மலையாதிர் – நான் வானளாவிய ஒரு வெற்பு என நினைத்து மயங்காதீர்கள். மான் இடன் ஆகும் – உமாதேவி ஆகிய மான் போன்றவளை இடப்பாகத்தில் கொண்டவர் ஆகிய. மானிடம் ஆம் மேனியர் – மனிதனைப் போன்ற உடலை உடையவர், ஆதல் உவமைப் பொருட்டு. ''என்னை வெறும் மலையாகக் கருதி மயங்க வேண்டா; நான் இறைவனின் வடிவம்'' எனத் தென்கயிலை கூறுகிறது.

சளக்கருக் கடலை நீந்துதற் கறியேன்
சஞ்சலித் தயர்ந்திடு திறம்என்
உளக்கம லத்தில் இருந்தநீ அறியா
ஒருசெயல் என்றுரைப் பேனோ?
துளக்கம்ஆர் அழல்பற் றிட, விரைந் தெண்கு
சூழ்ந்திடல் தனதுகே சத்தில்
விளக்கிடு கலியன் போன்றதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 72

49. சள – வஞ்சிக்கின்ற. கருக்கடல் – பிறவியாகிய சமுத்திரம். அறியேன் – அறியேனாக, முற்றேச்சம். தேவரீர் அறியாதது அல்ல என்பது

கருத்து. துளக்கம் ஆர் – ஒளி பொருந்திய. அழல் – தீ. எண்கு – கரடி. கேசத்தில் – தலை உரோமத்தால், வேற்றுமை மயக்கம். கலியன் – மிக்க வறுமையை அடைந்த கணம்புல்ல நாயனார், இவர் இயற்பெயர் தெரியவில்லை; கணம் புல்லை விற்றுத் தில்லைத் திருக்கோவிலில் திருவிளக்கிட்டு வந்தார். புல் விற்பனை ஆகாததால் தலைமுடியை எரித்தார். பெருவறுமை அடைந்த பொருளில் கலியன் என்றார். கலிய நாயனார் வேறு; அவர் தன் கழுத்தை அறுத்துக் கொள்ள முயன்றவர்.

காட்டுத் தீயைச் சுற்றி மயிரடர்ந்த கரிய கரடிகள் சூழ்ந்திருப்பது கணப்புல்ல நாயனார் முடி எரிவதைப் போல உள்ளது என்கிறார்.

தளர்வுறு விருத்த குமாரபா லகன்ஆம்
தன்மையை நீஉனல்ச் சுதர்கள்
இளவலாய்ப் பிள்ளை சேய்ப்பெயர் ஏற்றார்
என்றுகொல் வளர்ந்திசை புனைவீர்?
துளவணி உரத்தன் கனிகொள மாட்டான்
தொட்டுநன் காசினி துய்ப்ப
விளவுவிண் ணகம்போழ்ந் தோங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 73

50. விருந்தன் – முதியவன். குமாரன் – வாலிபன். பாலகன் – குழந்தை. உனல் – நினைத்து ஏற்றுக்கொண்டது. இது மதுரைத் திருவிளையாடல். சுதர்கள் – மைந்தர்களாகிய கணபதியும் முருகனும். இளவல் ஆய் – வாலிபர் ஆகியும். விநாயகர், முருகப் பெருமான் ஆகிய இருவரும் முறையே பிள்ளையார் சேய் என வழங்கப்படுதலால் சிவபெருமானும் உலகத்தில் முதல்வராகிய கிழவர் ஆன போதிலும் வாலிபராகவும் இளம் குழவியாகவும் மாறிக் காட்சியளித்தார் என்றபடி. ஐயத் தற் குறிப்பேற்றம். துளவு அணி உரத்தன் – துளசியைப் புனைந்த மார்பினராகிய திருமால். கனி கொள மாட்டான் – விளாமரத்தின் பழத்தை (உயரத்தால்) பெற முடியாமல், மாட்டானாகி. நன் காசினி துய்க்கும் – நல்ல மண்ணைத் தின்னும்படி. விளவு – விளாமரம்.

விளாம்பழம் கண்ணனுக்குப் பிடித்தது. அது மிக உயரத்தில் இருப்பதால் எட்டவில்லை; எனவே மண்ணைத் தின்றான் என்கிறார். ஏதுத் தற்குறிப்பு.

ஒற்றினால் ஒருவர்ப் பரவையிற் சேர்த்தாய்;
உயிர்மெய்யால் ஒருவரை எடுத்தாய்;
பற்றினால் வாடும் எனதுயிர்க் குயிராம்
பாததா மரைபுகப் பணிவாய்;
கொற்றம்ஆர் ஞான சற்குரு ஆகிக்
குறிஞ்சிவேந் தெனும்பெயர் புனைந்த
வெற்றிவேற் குகனும் போற்றுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 74

51. ஒற்றினால் – தூது சென்றதால். ஒருவர் – நால்வருள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி நாயனாரை. பரவையில் – பரவை நாச்சியாரொடு வேற்றுமை மயக்கம். உயிர் மெய்யால் – (வலிதாங்காமல்) பெருமூச்சு விடுகின்ற (சூலை நோய் கொண்ட) உடலால், உயிர் மெய் – வினைத்தொகை. ஒருவரை – மற்றொருவராகிய திருநாவுக்கரசரை. எடுத்தாய் – சமண சமயத்திலிருந்து மீட்டெடுத்தாய். பற்று – ஆசை. கொற்றம் – வெற்றி.

ஒற்று (மெய்யெழுத்து), உயிர்மெய், உயிர் (உயிரெழுத்து) என்னும் எழுத்திலக்கணக் கலைச் சொற்கள் தொனியாக அமைந்தன. மெய்யால் சுந்தரருக்கும் உயிர்மெய்யால் அப்பருக்கும் அருள் புரிந்ததைப் போல அடியேனை உயிராம் திருவடிகளில் சேர்த்துக் கொள்க என்கிறார். குகனும் – உயர்வு சிறப்பும்மை.

பத்தர்மேற் செலுத்தும் கருணைஎன் மீதோ,
பாவவல் அரக்கர்ஆ தியர்மேல்
வைத்தவெம் சினத்தை என்மல மிசையோ
வல்லைஉய்த் திடஉளம் மதியாய் –
செத்தபுள் விலங்கின் ஊன்உயிர் கொண்டு,
திகழ்என்பு காஞ்சியில் உய்த்து,
மெய்த்தவீ டளித்து, விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 75

52. மலமிசையோ – ஆணவத்தின் மீதோ. வல்லை – விரைவில். உய்த்திட – செலுத்த. உளம் மதியாய் – கருதுவீராக. புள் – பறவை. ஊன் – உடல், ஆகுபெயர். என்பு – எலும்பு. பேரூரில் இறந்து எலும்புகள் நொய்யலாற்றில் இடம்பெற்றால் ஒருவரின் பாவங்கள் நீங்கித் தூயராகிச் சிவலோகம் பெறுவர் என்பது தலபுராணத்தின் சுமதி கதிபெறு படலத்தால் அறியப்படுகிறது. ''ஆதியாம் புரத்திடை

யாக்கை வீழ்ந்ததும் போதிவர் காஞ்சியம் புனலில்த் தேய்ந்ததும் கோதினை முழுவதும் குமைத்துஅச் செம்மலைச் சோதிதன் சிவபுறச் சூழல் சேர்த்தவே'' (60) என்பது அப்பாடல்.

மதிநதிச் சடையும், மானமழுக் கரமும்,
மங்கைபங் ககன்றிடா வடிவும்
கதிஅருள் வனசப் பதங்களும் அடியேன்
கண்ணினும் கருத்தினும் இருத்தாய் –
துதிபுரிந் தன்பில்த் தொழுதழு துருகும்
தொண்டர்கட் குறுவிதி விதித்த
விதிசிரம் ஒழித்து விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 76

53. பங்கு அகன்றிடா. கதி – முத்தி. வனச – தாமரை போன்ற. தொழுது அழுது உருகும். விதி சிரம் – பிரமனுடைய தலை. சிவபெருமான் பிரமனின் தலையைக் கிள்ளியதற்கு அவன் தன் அடியார்களின் தலையிலும் ஊழ்விதியை எழுதியது தான் காரணம் என்கிறார். ஏதுத் தற்குறிப்பேற்ற அணி.

பூவணங் கிடுபூ அணங்குநா அணங்கின்
புருடர்,ஆ கண்டலன் ஆம்விண்
கோவணங் கிறைநீ அன்பமர் நீதி
கோவணம் கவர்ந்தனை என்னே!
காவணங் கியல்மா லவரும்மே லவரும்
கதிகொளக் கல்உருப் பொருப்பாய்
மேவணங் குருவாய் விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 77

54. பூவணங்கிடு – உலக மக்களால் போற்றப் பெறுகின்ற. பூ அணங்கு – மலர் மகளாகிய இலக்குமி. நா அணங்கு – நாமகளாகிய கலைமகள் ஆகியோரின். புருடர் – கணவன்மாராகிய மாலும் அயனும். ஆகண்டலன் – இந்திரன். விண்கோ – வானுலக மன்னனும், எண்ணும்மை விரிக்க. இறை – தலைவனாகிய. அன்பு – பக்தி மிக்க. அமர்நீதி – அமர்நீதி நாயனார், வரலாறு வெளிப்படை. கா அணங்கு இயல் மாலவரும் – கற்பக நாட்டுப் பெண்களின் அழகினை விரும்புகின்ற சுவர்க்க காமிகளும். கதிகொள – நடந்து சென்றே வானுலகை எட்டுமாறு உயர்ந்த. ''குவடுஏறி மந்தி கழுத்து எட்டி

அண்டர்பதி நோக்கும் வேங்கடக் காவலனை'' (திருவேங்கடத்தந்தாதி 67) என்பது போன்ற ஆட்சி இது. காவணங்கு இயல் மேலவரும் – காவடியைப் போல நன்றாக வளைந்து வணங்குகின்ற பண்பினையுடைய பெரியோர்களும். கதி கொள – முக்தியைப் பெறுமாறு. மாலவர் நடக்கவும் மேலவர் வீடு பெறவும் இறைவன் கல்லாக உருப்பெற்று விளங்குகிறார் என்றபடி. பொருப்பாய் – மலையாக. மேவு அணங்கு உருவாய் – பொருந்திய தெய்வீக வடிவமாக.

முதல் இரண்டடிகளில் பூவணங்கு, கோவணம் என்பன மடங்கி வந்ததும், மூன்றாமடியில் காவணங்கியல் என்றும் தொடர் இரட்டுற மொழிதலாக இருபொருள் தந்ததோடு கதி தரு என்பது சிலேடையாக நின்று நிரல்நிறையாகப் பொருள் தந்ததும் இச்செய்யுளின் அணி நயங்கள் ஆகும்.

கைப்பொருள்க் கள்ளர் கொளவிடுத் தரிப்பான்
காட்டகத் தமைந்துழல் வான்போல்
வைப்பொளி மணிநின் றனைவிடுத் துடலை
வளர்த்திடத் திரிந்தவத் தலுத்தேன்;
வைப்பொரு மாது சிரத்திருந் துவக்க,
மலைமகள் மலைமகள் ஆக,
மெய்ப்பொருப் பாகி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 78

55. அரிப்பான் – சல்லடையில் சலித்துப் பொருளை ஈட்டுவதற்காக. வைப்பு ஒளி மணி – பெருமை மிக்க பிரகாசத்தை உடைய இரத்தினம். அவத்து – வீணாக. வை பொரு மாது – தாங்கியுள்ள அலைகளை உடைய பெண்ணாகிய கங்கை. வை என்பது தாங்கியுள்ள என்னும் பொருள் தருதலை இந்நூலாசிரியரே இயற்றி உரை எழுதியுள்ள சிரவை-யமக அந்தாதியின் காப்பில், ''மறைச் சிரவை அந்த ஆதி'' என்னும் பகுதிக்கு, ''வேத முதலில் தாங்கியுள்ள அழகமைந்த பிரணவப் பொருள்'' எனக் கூறியுள்ளதால் அறியலாம். பொரு – முதனிலைத் தொழிற்பெயர். மலைமகள் – முதலாவது மலையரசனின் மகளாகிய உமாதேவியார், அடுத்தது ஊடல் கொள்ளும் பெண், முறையே வேற்றுமைத் தொகை, வினைத்தொகை. வைப்பாக ஒரு மாது சிரத்து இருந்து உவக்க மனைவி ஆகிய உமையம்மை எதிர்க்க மலை போல அசைவற்று

நிற்பது என்பது நிந்தைத் தொனி. மெய்ப்பொருப்பாகி – உண்மையாகவே மலை போலச் செயலிழந்து என் நிந்தைப் பொருளிலும். பொருப்பு மெய் ஆகிய என மாறி மலை வடிவெடுத்து என உண்மைப் பொருளும் கொள்க.

மைஉறும் மின்போல்க் கணத்தொழி தரும்இம்
மாயவாழ்க் கையைநிலை என்றே
உய்யும்நல் நெறிதோ யாதொரு தமியோன்
உழன்றொழிந் திடுவதோ? உரையாய் –
பைஉறழ் அல்குல் மலைமகள் தெண்ணீர்ப்
படிவுறு கங்கையாம் மங்கை
மெய்உற வமைய விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 79

56. மைஉறும் மின் – மேகத்தில் தோன்றும் மின்னல். கணத்து – இமைப்பொழுதில். தோயாது – ஈடுபடாமல். ஒரு தமியேன் – தனித்த (துணையற்ற) வறியவன் ஆகிய அடியேன். பை – பாம்பின்படம். மெய் உறவு அமைய – உண்மையாக அன்பு கொள்ள. மெய் உற அமைய – மலைமகள் இடப்பாதியிலும் கங்கை தலையிலுமாக உடம்பிலேயே பொருந்த. இரட்டுற மொழிதல்.

சொல்லுமாய்ப் பொருளும் ஆகிஅல் லவும்ஆய்த்
துலங்கும்நின் திருஉரு வினையே
அல்லும்நண் பகலும் இடையினும் என்றன்
அகம்புறம் கண்டுறப் புரியாய் –
''கல்உறழ் தனத்தால் நம்உருக் குழைத்தாள்
கவுரி;அன் னவள்உருக் குழைத்து
வெல்லுதும்'' எனக்கல் உருக்கொள்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 80

57. இடையினும் – அந்தி, சந்திகளிலும். கல்உறழ் – மலைகளைப் போன்ற. தனத்தால் – கொங்கைகளால். உமை தழுவக் குழைந்த காஞ்சிபுர வரலாறு வெளிப்படை. சிவபெருமான் மலை உருக்கொண்டதற்குக் காரணம் கற்பித்தலின் ஏதுத்தற்குரிய பேற்ற அணி.

கற்பக நீழல் வாழ்க்கையும் மாயக்
கனவெனக் கண்டுவர்த் துனது
பொற்பதத் தன்பர் அன்பர்தம் ஏவல்
புரிந்துதாள்ப் பொடிபுனை யேனோ?
கற்புமை இன்மை கங்கையைக் காணில்க்
கறுப்பள்;என் செய்தும்''என றாய்ந்து
வெற்பருள் உருவாய்த் தாங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 81

58. கண்டு - உணர்ந்து. உவர்த்து - வெறுத்து. இவர் வேறோரிடத்தில். ''மாயவன் அயன்சந் திரன்முதல்த் தேவர் வாழ்வையும் தாழ்வெனக் கருதும் நேயமெய்த் தொண்டர்'' (பட்டிநாயக மாலை 38) என்கிறார். கற்பு (மிக்க) உமை காணில் இன்ன(மு)ம் கறுப்பள் என இயையும். கறுப்பள் - இரட்டுற மொழிதலாகச் சினம் கொள்வாள், கரியநிறப் பெறுவாள் என இருபொருள் கொள்க. தாங்கு - கங்கையை மலைவடிவாக ஏந்துகின்ற. கங்கை இறைவனிடம் எப்போதும் அவர் மலை வடிவில் தன்னைப் பிரியாதிருக்க வேண்டிக் கொண்டு காஞ்சி நதியாக வந்தாள் எனத் தலபுராணம், தீர்த்தப் படலம் கூறுகிறது. அக்கருத்தையும் உட்கொண்ட எதுத்தற்குறிப் பேற்றம்.

மாட்சிதோய் நந்தி பிரம்புகொண் டுலவ,
மால்அயன் சுரர்முனி வரர்சூழ்
காட்சிமிக் கமைநின் திருக்கயி லாயக்
காட்சிகண் டுவக்கஎன் றருள்வாய்?
சேட்சிபெற் றண்டர் தாருவை நாடிச்
செழுங்கணீர் உகுத்தலர் தூற்றி,
மீட்சிபெற் றுனைத்தாழ் தருக்கொள்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 82

59. சுரர் - தேவர்கள். காட்சிமிக்கு - அற்புதம் மிகுந்து. காட்சி கண்டு - தோற்றத்தைத் தரிசித்து. என்று - எந்நாள். சேட்சி பெற்று - (நிலத்தைவிட அதிகமான) தூரத்தில் அமைந்து. அண்டர் தாருவை நாடி - தேவ லோகத்தின் பஞ்சதருக்களைச் சென்றடைந்து. கணீர் உகுந்து - 1. கள்ளாகிய (தேன்) திரவத்தைப் பொழிந்து. 2. விழிநீர் சிந்தி (இறைவனின் வழிபாட்டிற்குப் பயன்படாமல் தேவர்களின் அம்புலப் போகத்திற்கே பயன்படும் அவநிலைக்காக வருந்தி).

அலர் தூற்றி – 1. மலர்களை உதிர்த்து. 2. பழிச்சொற்களைக் கூறி (மேற்கண்ட காரணத்திற்காகவே). மீட்சி பெற்று – திரும்பி வந்து. தரு – மலர்கள்.

பாதகக் கொடியோர்க் கோர்அர சாம்மா
பாவினன் றெனைப்புறக் கணிக்கில்
போதமுன் ஒருவற் கீந்தனை என்னப்
புகலும்நூல் இனம்வெறும் பொய்யே –
பூதலத் திடைஓர் பொருப்பெனத் திகழ்ந்தும்
பொருந்துப நிடதம்ஆ கமங்கள்
வேதம்எட் டரிதா விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 83

60. போத – முழுநிறைவு ஏற்படும்படி. முன் – அக்காலத்தில். ஒருவற்கு – அங்கிரன் என்றும் வங்கநாட்டு வேடன் ஒருவனுக்கு. ஈந்தனை – அருள் புரிந்தாய். பூதலத்திடை – நிலஉலகில். அங்கிரன் கொலை வழிப்பறியையே தொழிலாகக் கொண்டிருந்தவன். அவன் அந்தணன் ஒருவனைக் கொன்று அவன் மனைவியை நுகர்ந்தான். பிறகு ஒரு பாம்பு தீண்ட காஞ்சி நதிக்கரையில் இறந்தான். அவன் உடல் நரிகளால் திருநீற்று மேட்டிற்கு இழுத்துச் செல்லப்பட்டது. இதனால் பாவல்களிலிருந்து விடுபட்டுக் சிவலோகம் சென்றடைந்தான். இதனைத் தலபுராணத்தில் அங்கிரன் கதிபெறு படலத்தில் விளக்கமாகக் காணலாம்.

பூவில்வாழ் அயனும் மாலும்முன் களிப்பப்
புரிந்திடும் நின்திரு நடனம்
பாவியேன் ஒருக்கால்ப் பார்த்திடப் புரியில்ப்
பரம!நிற் றடுப்பவர் எவரே?
கோவிலுள்ப் புகுந்தர்ச் சகன்இடும் தீபம்
கொண்டுநோக் காதுயிர் யாவும்
மேவிடத் திருந்தே காணும்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 84

61. பூவில் – தாமரையில். உயிர்யாவும் – உயிர் இனங்கள் எல்லாவற்றையும். மேவு இடத்து இருந்தே – இருக்கும் இடத்தில் இருந்து கொண்டே. ஆலயத்தின் கருவறையில் இலிங்கமாக இருந்தால் அங்கு ஏற்றப்படும் விளக்கின் ஒளியைக் கொண்டே

பார்க்க வேண்டும். இறைவன் மலைவடிவில் இருப்பதால் தாமே நேரில் பார்க்கலாம்.

பாடவன் கலைசெய் துன்திருப் பாத
பங்கயங் களைச்சிர மீதில்ச்
சூட்ட விழையேன்; ஆயினும் வலிந்துன்
தொண்டருள் இருத்திஆண் டருள்வாய் -
காடகம் என்னத் திரிவிலங் கினத்தில்க்
கடைபடு மடமையர் தமக்கும்
வீடிட வெற்பா விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 85

௨. காடு (அகம்) இடம். மடமையர் - அறிவற்றவர். வீடு இட - வீட்டுப்பேற்றை அருள. வெற்பா - மலையாக.

எண்ணிடில் கேட்கில் காணில்மிக் கின்பம்
ஈந்திடும் நின்திறம் இகந்து
புண்ணிடை மொய்க்கும் ஈஎன உலகப்
பொய்யிடை புரண்டனன் வறிதே;
"புண்ணியத் தவமெய்த் தொண்டர்போல் என்பால்
பொருந்துயிர் களைப்புரி வல்"என
வெண்ணிறக் காஞ்சி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 86

௩. திறம் இகந்து - இயல்பினை நீத்துவிட்டு. வறிதே - வீணாக. தலபுராணப்படி, கங்கை இறைவனிடத்திலே, "சரியைமுன் நான்கும் சாலச் சாதித்த தவத்தோர்க் கெய்தும் உரியதன் முத்தி நான்கும் உரைத்தபா தகங்கள் மூன்றும் விரிசெயும் இழிஞராக மேவினர் பரிசித் தார்க்கு வரிசையின் அடியேன் தல்க வரமும் இங்கருளல் வேண்டும்" (தீர்த்தப்படலம் 12) என விரும்பிப் பெற்றுக் கொண்டுதான் காஞ்சியாக வந்துள்ளது.

தன் இழிவைக் கருதாமல் நற்கதி தரவேண்டும் என்றும் கருத்தை நொய்யலாற்றின் சிறப்பைக் கூறி வலியுறுத்துவதால் கருத்துடை அடைகொளி அணி ஆகும். ஒப்பு : புறம்கறை ஒழுகுசெம் புண்ணில் ஈஎன வறும்கதை புல்லியர் கொள்வர் மாமலர் உறுங்கனி வண்டின் அல்லமன் நன் காதையைப் பிறந்துற பயன்பெறு பெரியர் கொள்வரால். (பிரபுலிங்கலீலை - துதிகதி 15).

மாண்அவிர் உனது திருவடிக் கன்பு
மருவிலர் மரஉரி தாங்கி,
ஊண் அருந் திலர்காற் றயின்றுவாழ் நரினும்
உறுபயன் துன்பல துளதோ?
ஆணவம் கொடுதே டரிஅயற் கெட்டாது
அதிபவம் பொருந்தும்அங் கிரன்நேர்
வீணர்கட் கருளி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 87

64. மாண் அவிர் – மாட்சிமை மிக்க. மருவிலர் – பொருந்ாதவர். அருந்திலர் – சாப்பிடாமல், முற்றெச்சம். காற்று அயின்று. உளதோ என்றும் வினா எதிர்மறைப் பொருட்டு. தேடு அரி. அயற்கு – பிரமனுக்கு. பவம் – பாவம். அங்கிரன் பற்றி முன்னர்க் கூறப்பெற்றது.

புளியுறு பழத்தைப் போலஆக் கையினில்ப்
பொருந்தி நின் பொன்னடித் துணை ஆம்
களிஅருட் கடலின் மூழ்கமெஞ் ஞானக்
கண்அளித் தெனை முற்றும் காப்பாய் –
அளியர்ஆம் மாந்தர் தேர்தரப் புவிக்கண்
அசலமாத் திகழினும் ககன
வெளிஎனக் கிடம்என் றோங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 88

65. ஆக்கை – உடல். உடலில் இருந்தாலும் அதனோடு தொடர்பற்று. களி – இன்பமயமான. அளியர் – எளியவர். தேர்தர – கண்டு உரை. புவிக்கண் – உலகில். அசலமா – மலையாக. ககன வெளி – வானப் பெருவெளி. எனக்கு இடம். என்று – என உணர்த்தி.

ஆதிஅந் தமும் அற் றோங்குநின் புரணத்து
அமைந்துசிற் சுகம்அநு பவியேன்
சூதியல் மாயை வலையினுள்ச் சிக்கிச்
சுழன்றனன் எனைஎடுத் தணையாய் –
கோதியல் மலம்ஆம் களிம்புறு மனத்தைக்
குலவும்மாற் றுற்றபொன் ஆக்கும்
வேதியாய்ச் சிறந்து விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 89

66. புரணம் - பூரணம், முழுமை. சிற்சுகம் - ஞானாந்தம், மெய்யறிவின்பம். அநுபவியேன் வினையாலனையும் பெயர். சூது இயல் - வஞ்சகத் தன்மைகொண்ட. சுழன்றவன் - சுழலுகின்ற, முற்றெச்சம். கோது இயல் மலம் - குற்றம் பொருந்திய ஆணவம். மாற்று உற்ற - மாற்றுயர்ந்த. வேதியாய் - (இழிந்த உலோகங்களைப் பொன்னாக மாற்றும்) வேதித்தல்ச் செயல்போல. வேதி - முதினிலைத் தொழிற்பெயர். ஆதல் உவமைப் பொருட்டு.

சோதிஎன் றுன்னைத் துதித்ததற் காகச்
சோதியேல்; எனக்குநின் அருளை
ஈதி;மிக் கேழை; ஏழைபங் காளன்
என்றபேர் புரந்திட எண்ணாய்;
மீதியல் உலகுக் குத்தரம் இடையில்
விரவிரு கயிலையின் வித்தாய்
மேதினிக் கணியாய் விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 90

67. சோதி என்று - ஒளியே என. சோதியேல் - சோதனை செய்ய வேண்டாம். ஈதி - தருவீராக. ஏழை பங்காளன் - 1. எளியவரின் சார்பில் உள்ளவர். 2. மாதொரு பாகர். புரந்திட - காப்பாற்றிக் கொள்ள. கயிலைகள் வடகயிலை, நடுக்கயிலை, வெள்ளியங்கிரி ஆகிய தென் கயிலை என் மூன்று. இச்செய்தி தலபுராணத்திற் கண்டது. (புராணவரலாற்றுப் படலம் 41,42) உத்தரம் - வடக்கு. இடை - நடு. விரவு இரு. மீது இயல் உலகுக்கு வித்தாய் மேதினிக்கு அணியாய் விளங்கு என இயையும்.

நினைத்துநின் அடிகள், நெஞ்சம்நெக் கிருகண்
நீர்சொரிந் தேத்தில னேனும்
எனைப்புறக் கணியா தருளினால் முன்வந்து
ஏன்றுகொள் வாய்; விடேல்; எந்தாய்!
அனைத்துள பொருள்க்கும் இன்பம்ஈந் திடுமாறு
அமையினும், அன்புடன் காண்போர்
வினைக்குமட் டிகலாய் விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 91

68. அடிகள் நினைத்து. ஏன்றுகொள்வாய் - நின்னோடு பொருத்திக் கொள்வாய். வினைக்குமட்டு - இரு வினைகளுக்குமாத்திரம். இகலாய் - பகையாக. வினைகளை அழிந்து விடுகிற என்பது கருத்து.

புற்புதம் நிகர்ஆம் உடல்அபி மானம்
போக்கி,மால் அயன்அறி வரிதாம்
அற்புதம் பொருந்தும் குறிகுணம் கடந்த
ஆனந்தக் கூத்தினைக் காட்டாய் -
பொற்புமிக் கமைஇவ் வரைதெரி வார்க்குப்
பொருக்கென இன்பம்ஈந் திடலால்
வெற்பிதொன் றேநின் வடிவு;தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 92

69. புற்புதம் - நீர்க்குமிழி. அபிமானம் - தன்னுடையதாக நினைத்து மகிழ்தல். குறி குணம் - பெயர் முதலிய அடையாளங்களையும் சொல்லிக் காட்டக்கூடிய பண்புகளையும், உம்மைத்தொகை. பொற்பு - அழகு. வரை - மலை. பொருக்கென - விரைவாக, விரைவுக்குறிப்பு. வெற்பு இது ஒன்றே. கண்டவுடன் மகிழ்ச்சியைத் தருதலால் இந்த மலை ஒன்று தான் மகேசனின் வடிவம் என்றபடி

பசையிடைப் பட்ட புள்என உடலப்
பற்றமைந் தனன்விடுக் கறியேன்
அசைவில்நின் திருத்தாள்க் கடைக்கலம் ஆனேன்;
அப்ப! நின் ஆணை! எற் கருள்வாய் -
நசையுடன் பார்த்தல் நிட்டையா, மொழியே
நவில்மறை யாக்கொடு பாசம்
மிசைஅமு தாக்கொண் டருள்செய்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 93

70. பசை - கோந்து, பிசின். புள் - பறவை. பற்று அமைந்தனன் வினையாலணையும் பெயர். விடுக்கறியேன் - விலகத் தெரியாதவனாகி, முற்றெச்சம். அசைவுஇல் - அழிவற்ற. நசையுடன் - விருப்பத்துடன். மொழியே - பேசுகிற சொற்களே. பாசம் - அடியேனின் மலங்களை. மிசை அமுதா - உண்ணும் உணவாக. பாசத்தை ஏற்றுக்கொண்டு பதித்துவத்தை (சிவத்தை) அருளுகின்ற மலை என்றவாறு.

கற்பனை உலக வாழ்க்கைஎன் றெனக்குக்
காட்டியும், யான்மயங் காதே
நிற்பதற் காம்மெய் ஞானம்தந் திலதால்
நீடுறும் வன்றொடர்ச் சுழன்றேன்
கற்புஅருட் காஞ்சி மாநதி கருணைக்
கடலதாக் கரைஇல்ஆ னந்த
வெற்பதாத் தேர்ந்தேன் நின்னைத்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 94

கு. சுழன்றேன் - சுழலுகின்ற அடியேன், வினையாலணையும் பெயர், எழுவாய். கற்பு அருள் - மெய்ஞானத்தை அளிக்கின்ற. கரை இல் - எல்லையற்ற. நதியைக் கடலாகவும், நின்னை வெற்பதாகவும் தேர்ந்தேன் என்க. வெற்பது என்றழி அது பகுதிப் பொருள்விகுதி. ஞானம் தரக் காஞ்சிநதி; சுழற்சிநீக்கி இன்பம் அருளைத்தேவர் என நிரல்நிறையாக இணைத்துக் காண்க.

நரைதிரை மூப்போ டிருமல்வந் தடியேன்
நலிவுறா முன்னம்நின் செம்பொற்
றுரைகழல்ப் பாதப் புணைஅளித் தன்பர்
குலவும்ஆ னந்தவீட் டமைப்பாய் -
கரைஇல்ஆ ரணங்கள் நித்தன்நீ எனினும்
கணிக்கலன்; கண்டவர் இன்பம்
விரையநல் கிடலால் விளங்குதென்க கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 95

கு. துரைகழல் - ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்த. புணை - தெப்பம். கரை இல் ஆரணங்கள் - பற்பல வேதங்களும். கணிக்கலன் - தெரிந்து மதிக்கமாட்டேன். விரைய - விரைவாக. அடியேன் ஆகம அளவையால் அறிந்தேனில்லை. காட்சியளவையால் கவரப் பட்டேன் என்றவாறு.

ஏஉறழ் விழியார் கருப்பைபுக் காலை
இசைந்திடு கரும்பெனப் பிறந்து
சாவுறும் காலை படும்துயர்க் கயர்ந்துன்
சரணம் ஆயினன்எனைப் புரப்பாய் -
பூஉறு தேராப் புறம்எரி படுத்தப்
போந்தநா ளோ? முனோ? பின்னோ?
மேவும்இவ் வரைஆ இயது - தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 96

73. எஉறழ் - களைவயைப் போன்ற. புக்கு - புகுந்து. ஆலை - சாறுபிழியும் இயந்திரம். அயர்ந்து - சோர்ந்து. அந்தி. பூ - நிலஉலகம். உறுதேர் ஆ - பொருந்திய இரதமாக. புரம் - முப்புரம். போந்த - சென்ற. தேவரீர் முப்புரம் எரிக்கச் சென்ற காலத்திலா, அதற்கு முன்பா அல்லது பின்பா வெள்ளியங்கிரியாக வடிவெடுத்தது என வினவுகிறார்? இம்மலையின் தொன்மை உணர்த்தியவாறு.

அப்பர் பெருமானின் ''ஒருவனாய் உலகேத்த'' என்றும் திருவாரூர்ப்பதிகத்தின் (6-34) எதிரொலி இவ்விருத்தம். ''சிலையான்முப் புரம்எரித்த முன்னோ பின்னோ? திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே'' (தேவாரம் 6-34-2)

மக்களாய்ப் பிறந்தும் உனைத்தரி சிப்பான்
மதிக்கிலர் மனைசுதர் என்று
புக்கலை வார்கள்க் கவர்அல துவமைப்
பொருள்பிறி தாய்ந்திடில் உளதோ?
தக்கநின் உருத்தன் எல்லையிற் கொண்டு
தழைத்தநா டிதற்கிரும் புகழ்ச்சீர்
மிக்ககொங் கென்கை சாலும்;தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 97

74. மதிக்கிலர் - நினையாமல், முற்றெச்சம். புக்கு அலைவார். கட்டு அவர் அலது உவமைப்பொரள்பிறிது. உளதோ - இல்லை என்றபடி. உரு - வடிவத்தை. தழைத்த - சிறப்பாக வாழ்கின்ற. நாடு இதற்கு. இரும்புகழ் - பெரிய கீர்த்தி. கொங்கு என்கை - (சருக்கரை), தேன் மகரந்தம், நறுமணம் முதலிய நல்ல பொருள்களைக் கொண்ட) கொங்கு என்னும் பெயரைக் கூறுதல். சாலும் - மிகப்பொருந்தும். இறைவனே மலையாக எழுந்தருளியிருப்பது கொங்குநாட்டிற்குச் சிறப்பு என்றவாறு.

முரிதிரைக் கடல்ஆ லத்தினுக் கஞ்சி
முறையிடும் தேவரைக் காத்தாய்க்கு
அரிவையர் விழிநஞ் சஞ்சினேன் றனையும்
ஆதரிப் பதுகடன் அலவோ?
''அரியன்என் றெனைச்சொல் நூல்இளம் பொய்ப்ப
அசரமும் பொருந்தவாழ்பு வன்'' என
விரி அருள்ப் பொருப்பாய் விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 98

75. முரிதிரை – அசைகின்ற அலைகளை உடைய, வினைத்தொகை, முறி என்பாலது எதுகை நோக்கி முரி எனப் போல ஆயிற்று. ஆலத்தினுக்கு – விடத்திற்கு. அரிவையர்-மங்கையர். பெண்களின் கண்களும் கடலைப் போன்றன. அதில் உண்டாகும் நஞ்சனைய பார்வை என்னைக் கொல்வதால் பயப்படுகிறேன் என இணைத்துக் கூறியது நயம். அரியன் – அணுகுவதற்கு அரியவன். அசரமும் – நிலைத்திணை உயிர்களும் (தாவரம்) அருள்வாரி என மாறுக.

பாசவல் வினையின் உனைமறந் துழல்வெம்
பாவிஎன் றெனைவிடா தருளால்த்
தேசமை நினது தெரிசனம் காட்டிக்
திருத்தல்நின் கடன்; உனக் கபயம் –
ஆசறு கதியின் ஈந்து, தண் புனலில்
ஆடுவார்க் கிம்மையில் மணிபொன்
வீசலைக் காஞ்சி நல்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 99

76. பாச – பாசத்தைப்போலப் பிணிக்கின்ற. வினையின் வினைகளால். தேசு அமை – ஒளி பொருந்திய. அபயம் – அடைக்கலம். ஆசுஅறு கதி –குற்றமற்ற முத்திப்பேறு. பின் – இறப்பிற்குப் பிறகு. வீசு அலை – எறிகின்ற திரைகளை உடைய, வினைத்தொகை. காஞ்சி – நொய்யல் ஆற்றை. நல்கு – தோற்றுவிக்கின்ற.

காஞ்சி மாநதி வெள்ளியங் கிரியில் உற்பத்தி ஆகிறது.

அறுவகைச் சமயத் தேவராய்ச் சத்சித்
ஆனந்த மாநிகழ் உன்னைச்
சிறுசம யப்புன் கலைகொடு தருக்கம்
செய்மதி ஈனர்தேர் குவரோ?
நறுமலர்த் தருவோ டதிபுள்மா நரர்கள்
நானம்ஆற் றிடநடந் தளற்றை
வெறுமைசெய் காஞ்சி வழங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 100

77. சத் – அழியாதது. சித் – அறிவுமயமானது. ஆனந்தம் – இன்பவடிவானது. புன்கலை என்றது புத்தகப்படிப்பால் மட்டும் பெறும் சிற்றறிவை. தேர்குவரோ – தெளியார். ஒப்பு: நூல் உணர்வு உணரா நுண்ணியோன் காண்க (திருவாசகம் 3:49) வாசித்துக்காணொண்ணாதது (திருப்புகழ் 342) கற்க இடர்ப்

பட்டுமிகக் கற்றஎல்லாம் கற்றவர்பால் தற்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ (சிவயோகசாரம் 128) சின்னம் சிறியார்கள் செய்தமணல்ச் சோற்றை ஒக்கும் மன்னும் கலைஞான மார்க்கம் பராபரமே (தாயுமானவர் பாடல் 43:187) முதுகும்பல் கோடி சமயப்பிணக்கர் முறைகெட்டுழன்று மயலால் அது தெய்வம் என்றும் இது தெய்வம் என்றும் அமைவுற்றறிடாமல் அலைவார் (குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி 23) முதலிய பல. தரு – மரம். புள் – பறவை. மா – விலங்கு. நானம் – குளியல். அளற்றை வெறுமை செய் – நரகத்தைக் காலி செய்கின்ற. காஞ்சியில் படிபவர்கள் எல்லோரும் சிவகதி அடைந்து விடுவதால் நரகத்திற்குச் செல்வோர் எண்ணிக்கை குறைந்து அவ்விடம் வெறுமை அடைகிறது. வழங்கு – தோற்றுவிக்கின்ற.

கொள்ளிய னிடைதோய் எறும்பென வினைப்பொய்க்
கூட்டில்உற் றுளம்குலை வேன்நீ
தள்ளிடின் நீங்கி மடிந்தொழி வதலால்
சகத்தில்ஓர் திக்குமற் றறியேன்
நள்ளிரா சதநீ திச்சிவப் பொழித்து
ஞானவெண் சத்துவ அருளால்
வெள்ளியங் கிரியா விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 101

78. கூட்டில் உற்று உளம் குலைவேன். ''கொள்ளித் தலையில் எறும்பது போலக் குலையும் என்றன் உள்ளத்துயர்'' (கந்தர் அலங்காரம் 106). மடிந்து ஒழிவது அலால். சகத்தில் - உலகில். திக்கு - ஆதரவு தருபவர். நள் இராசத நீதி - மிகுதியான இராசத குணத்தின் பண்பாகிய, இராசதம் என்னும் குணம் ஊக்கம், ஞானம், வீரம், தருமம், தானம், கல்வி, கேள்வி என்பதனை அடக்கியது. இக் குணத்தைச் செம்மை நிறமுடையதாகக் கூறுதல் நியாயநூல் மரபு. சத்துவம் - சாத்துவிக குணம், இதனை வெண்மை நிறமுடையதாகக் கூறுவர்.

கைவரும் அமுதை எறிந்துஞா னியின்கால்க்
கறைகொள்புண் நக்குவான் போலத்
தெய்வம்ஆ கியநின் அடிவிடுத் துடல்இச்-
சித்தலைந் தெய்த்தனன் சிறியேன்;
மைவரும் காள கண்டம் ஆ தியகொள்
வடிவமோ? இம்மலை வடிவோ?
மெய்வடி வெதுநிற் கருள்செய்;தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 102

௨. ஞாலியில் - காலில். ஒலித்து அலைந்து எய்த்தனள். மை வரும் - அஞ்சனக்கல்லைப் போன்ற. காள - நஞ்சமைந்த. கண்டம் - கழுத்து. நிதி சிவபெருமானின் வடிவம். மெய் - உண்மையான. வடிவு எது என்று அறைகுவாய் - கூறியருளுக.

அலங்குளைப் பரித்தேர் ஊர்ந்துல கெல்லாம்
ஆட்சிசெய் மன்னர்ஆ னாலும்
நலங்கிளர் பதத்தன் பிலர்எனில் அவர்புன்
குரும்பினும் சிறியவர் அன்றோ?
புலங்கொள்வார் பாவம் பற்றற விலக்கிப்
புண்ணிய விலங்கல்நீ பாவம்!
விலங்கல் ஆ யினை என்? விளம்பு;தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 103

௩. அலங்கு உளை பரி - அசைகின்ற பிடரிமயிரை உடைய குதிரைகள் பூட்டப்பெற்ற உலகு எல்லாம். பதத்து அன்பு இலர். புன் - சிறிய. புலம் கொள்வார் - அறிவோடு ஏற்றுக் கொள்ளும் அடியார்கள். பாவமும் பற்றும் என உம்மை விரிக்க. பாவம் - பரிதாபத்தை உணர்த்தும் சொல். விலங்கல் - மலை. என் விளம்பு - எதனால் எனக் கூறியருளுக.

உடையினில் நடையில்ப் பணியினில்க் கபட
உரையினில் உழைஎனப் பிறழ்கட்
கடையினில்த் தனத்தில் தனத்தினைக் கவர்வார்
காதலில்ப் போதரா தருள்வாய்
புடைஅடுத் தன்பால்ப் பார்த்தவர்க் கவர்பால்ப்
பொருந்திடு வல்வினை தனக்கும்
விடைஅளித் தருளி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 104

௪. பணியினில் - ஆபரணங்களாலும். உழை என-மான்போல. பிறழ் - ஒளிரும். கட்கடையினில்-கடைக்கண்ணால். தனத்தில் - நகில்களால். தனத்தினை பொருளை. போதராது - போகாமல், ஈடுபடாமல். புடை அடுத்து-அருகே நெருங்கி. அன்பால் பார்த்தவர்களுக்கு விடை வாகனத்தைக் கொடுத்து - அதாவது சாரூப முத்தியைஅளித்து. அவர்பால் பொருந்திடு வல்வினை தனக்கும் விடை அளித்து-நீக்கி.

நாற்கவி புலவர் செவிஅமு தென்ன
நல்த்தமிழ்க் கவிமழை பொழிந்து
பாற்கரன் அனைய புகழுடன் பாராய்;
பலரொடுன் பால்உறப் பாராய்;
வேற்கரன் கணேசன் அன்று-அன்பால் என்பால்
மேவுயிர் யாவும்சேய் கள்என
மேற்கொடு முத்தி அணைக்கும்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 105

82. நாற்கவி - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் ஆகிய நான்குவகைச் செய்யுள்கள். பாற்கரன் அனைய-சூரியனைப் போன்ற உன்பால் - தேவரீருடன். வேற்கரன் - வேலேந்திய கைகளை உடைய முருகப் பெருமான் மேற்கொடு - ஏற்றுக்கொண்டு. முத்தி அணைக்கும் - 1. முத்தமிட்டு ஆலிங்கனம் செய்து கொள்ளும், 2. வீட்டுப் பேறாகிய முத்தியில் பொருந்துகின்ற.

கூற்றுயிர் கொள்ளக் குறுகும்முன் நின்பொற்
குரைகழல் கழழ் அருள் தெப்பத்து
ஏற்றுவாய் என்ன நம்பினேன்; தள்ள
எண்ணிடேல்-புண்ணிய மூர்த்தி!
சாற்றும்ஆ ரணம்ஆகமம்அவன் அன்றிச்
சார்அருள் இன்றெனல் போல
வேற்றுமை உறாது விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 106

83. கூற்று - இயமன். பொன் - அழகிய. குரைகழல் - ஒலிக்கின்ற வீரக் கழலை அணிந்த. கழல் - திருவடிகள் ஆகிய. ஆரணம் - வேதம். இன்று எனல்-இல்லை எனக் கூறுதல். வேற்றுமை உறாது - வேறுபாடின்றி.

நயனம்நீர் உருப்ப நெஞ்சம்நெக் குருக
நாள்மலர் சொரிந்துனைப் போற்றித்
துயர்அறு பரம சுகப்பெரு வெளியில்த்
தூங்குமா றென்றெனக் கருள்வாய்?
புயவலி அரக்கர் ஆதியர் பெயர்க்கப்
போந்திடா வணம்மிக நீண்ட
வியன்உருக் கொண்டு விளங்கதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 107

௪. நடலை - கவலை. ஏங்க - ஆவலார்க்க. தூங்குமாறு. தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவது எக்காலம் என்பார் பத்திரகிரியார் (மெய்ஞ்ஞானப் புலம்பல் 11). என்று - எந்நாள். எனக்கு அருள்வாய். படலை - கோள்வலை மிக்க. ஆதியர் - முதலியோர். வியன் உறு - வியப்பிற்குரிய.

சந்தியல் மதவா தப்பிணக் கொழிந்த
சத்திய சுத்தசன் மார்க்கத்
தெள்ளியர் உளங்கொள் அருள்ப்பெரும் சுகத்தைச்
சிறியனேற் கருள்கதி இதுவே -
நள்ளியல் பேர்க்கொத் தியல்வடி வளமயில்
நரர்குணம் கெடுபவர்என் றருளால்
வெள்ளிகாட் டாய்கல் உருக்கொள்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 108

௫. சந்தியல் - சிக்கல்கள் நிறைந்த. மதவாதப் பிணக்கு ஒழிந்த - உண்மையான பக்தியோ, தெளிவான ஞானமோ இல்லாமல் மதவெறி கொண்டு பாராட்டப்பெறும் பகைமை நீங்கிய. சத்திய - அழிவற்ற. சுத்த- தூய்மையான சன்மார்க்கத் தெள்ளியர் - நன்னெறியில் ஒழுகுகின்ற ஞானிகள். இது பொதுவாகத் தூய ஞானிகளைச் சுட்டுவது. வள்ளலாரின் நெறியைக் குறிப்பிட்டுக் காட்டுவது அன்று. கதி - சமயம். நள் இயல் பேர்க்கு ஒத்து இயல் - விரும்பப்படுகின்ற வெள்ளிமலை என்றும் பெயருக் கேற்ற. கல்உரு அமையில் - வெள்ளியாகவே உருவம் ஏற்பட்டு விட்டால். நரர் - மனிதர். குணம்கெடுவர் - பொருளாசையால் திருடத் தொடங்குவர். வெள்ளி காட்டாய் - இரசிதமாகக் காட்சிதராதவரே.

கஞ்சநும் அலலால் வெந்தொழி அனங்கன்
கைம்மலர் படக்கலங் கிடுவேன்
தொண்டர்ஏத் தெடுக்கும் நின்பத மலர்கள்
தோய்ந்துளம் களிக்கும்நாள் உளதோ?
அண்டர்பூ மாரி பொழிதலிற் பொழில்விட்டு
அகல்அளி இனம்அறி ஞரைப்போல்
விண்தலம் உவர்த்து மீளும்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 109

௬. அனங்கன் - உடல் இல்லாதவன், மன்மதன். கைம்மலர் - கைகளால் எய்யும் மலர்க்கணைகள். கலங்கிடுவேன் ஆகிய நான் - எழுவாய்.

அண்டர் - தேவர்கள். அகல் - இறைவனை அருச்சிக்கும் மலர்கள் தம்மேல் படாமல் அகன்று செல்கின்ற. அளி இனம் - வண்டுக் கூட்டங்கள். விண் தலம் உவர்த்து - தேவலோகத்தின் மேல்வெறுப்புற்று. மீளும் - மீண்டும் இவ்வுலகச் சோலைகளுக்கே திரும்பும். அறிஞர்கள் விண்ணுலகை வெறுப்பதன் காரணம் இம்மாலையின் 58 ஆம் பாடலில் விளக்கப் பெற்றது.

உருவம்நா மம்சங் கற்பவி கற்பம்
ஒழித்துயிர் அதனுளே இன்பம்
மருவும்நின் நடனம் காட்டிவன் மாயை
மயக்கம்முற் றறஅருள் வழங்காய்
கருதுவார் கருதும் கடவுளர் வடிவாக்
காட்சிநல் குதும்எனப் பொதுவாம்
விருடபத் துவசங்கொண் டிலகுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 110

87. நாமம் - பெயர். சங்கற்பம் - விருப்பம். விகற்பம்-மாறுபாடு. விருடபம் என்னும் சொல் எருது, பெருச்சாளி, மயில் (மயில்த்தோகை, ஆகுபெயராக மயில்), யானை (யானையின் காது, ஆகுபெயராக யானை) என்னும் பொருள்களை உடையது. துவசம் - கொடி. விருடபத் துவசம் - எருதுக்கொடி சிவபிரான், பார்வதி. பெருச்சாளிக்கொடி -விநாயகர். மயில்க்கொடி - முருகன் (வாகனத்தையும் கொடியாகக் கூறல் மரபு) எனப்பொது ஆகிறது.

பரம்பொருளுக்கென ஒரு வடிவமோ பெயரோ கிடையாது. அன்பரின விருப்பப்படியே அவை அமைகின்றன என்னும் உயர்ந்த தத்துவ உண்மை இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. ''எந்த வடிவும் எடுக்கும் பொருளுக்குச் சொந்த வடிவேதென் றுந்தீபற! தொண்டர் நினைப்பதென் றுந்தீபற!'' (சதகஉந்தி 8) என்பது வண்ணச்சரபர் வாய்மொழி.(87)

வண்டுறு காந்தள் மலர்க்கையர் அரிமேல்
வாரணந் தன்னை, அம் புலிமேல்க்
கொண்டுள மானைக் கண்டுளம் மால்மேற்
கொண்டுழல் வேற்கருள் கூராய்
வண்டுருக் கொண்டு துளைத்தவன் போன்ற
வைரநெஞ் சகம்படைத் தோரும்
விண்டுவென் றேத்த விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 111

88. வண்டுஉறு - 1. வண்டுகள் மொய்க்கின்ற. 2. வளையல்கள் பொருந்தியுள்ள, முதலாவது காந்தள் மலருக்கும் இரண்டாவது கைகளுக்கும் அடை. அரிமேல் - சிங்கம் போன்ற இடுப்பின் மீதுள்ள. வாரணம் தன்னை - யானைகளைப் போன்ற கொங்கைகளை. அம்புலிமேல் - சந்திரனைப் போன்ற முகத்தின் மீது. மானை - மான்போல்மருளும் கண்களை. மால் மேற் கொண்டு - காதல் மீறி. அரி, வாரணம், அம்புலி மூன்றும் உவம ஆகுபெயர். வண்டு உருக்கொண்டு துளைத்தவன் - பிருங்கி முனிவன், இவர் தனக்கு மோட்சம் மட்டுமே வேண்டும் அதற்குச் சிவபெருமானை மட்டும் வழிபட்டால் போதும் எனக் கருதி உமாதேவியை வழிபடா தொதுக்கினார். சிவபெருமான் மாதொரு பாகனாகக் காட்சியளித்த போது ஒரு வண்டின் வடிவம் தாங்கி அம்மையப்பரின் உடலைத் துளைத்துக்கொண்டு வலப்பாதியாகிய இறைவடிவத்தை மட்டும் வலம் வந்தார். மறந்தும் புறம்தொழா இந்த மனநிலையே வைர நெஞ்சகம் எனப் படுகிறது. விண்டு எனும் சொல், மலை, திருமால் (விஷ்ணு) எனப்பொருள் தரும். உமையம்மையையே வணங்காதவர்கள் கூட மலை தானே என வணங்குவர்.

தளம்பொலி கமலன் கைகொடின் வமும்மெய்
சமைத்தயர் வுறப்புரி யாதே
களம்பொலி தரநஞ் சிருத்தும்நீ எனைநின்
கழல்அடி நிழல்உறப் புரிவாய் -
உளம்பொலி அன்பர் துயர்வினாய், அவர்க -
ளுடன்வருந் திடும்திறல் தெரிய
விளம்பிஅத் துவிதம் காட்டுதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 112

89. தளம்பொலிகமலன்-இதழ்களை உடைய தாமரைப்பூவில் இருக்கும் பிரமன். கைகொடு - தன் கரங்களை கொண்டு மெய் சமைத்து - உடலைப் படைத்து. அயர்வுற - வருந்துமாறு களம் - கழுத்தில். வினாய் - கேட்டு. அத்துவிதம்-இரண்டற்ற நிலை.

பொருவரும் நினது திருவருட் பெரும்சீர்
பொருந்திலேன்; புண்உடல் பொறுத்தற்கு
அருவருக் கின்றேன்; என்னைநீ அருளால்
ஆட்கொள வேண்டும்; என் அரசே!
பருவத மான்கண் டம்புலி வயிற்றுட்
பட்டமான் நாணுபு திரும்பி
வெருள்கொடார் கலியில்ப் பாயும்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 113

90. பொருவரும் - இணையற்ற. பொறுத்தற்கு - தாங்கிக் கொண்டிருப்பதற்கு. பருவத மான் கண்டு - (வெள்ளியங்கிரி) மலையில் திரியும் மான்களைப் பார்த்து. அம்புலி வயிற்றுள்ப்பட்டமான் - சந்திரனின் அகட்டினிற்குள் சிக்குண்ட (களங்கமாகிய) மான். நாணுபு- (தான் சுதந்திரமாக இயங்க இயலவில்லையே என) வெட்கம் கொண்டு. வெருள்கொடு - அறிவு மயங்கி. ஆர்கலியில் - கடலில். சந்திரன் கடலில் மறையும்போது மானும் மறைந்து விடுதல் கடலில் பாய்ந்ததாகக் கூறப்பட்டது.

பாவமோ டறம்மிச் சிரம்எனும் கன்மப்
பரப்பில்உற் றிருள்புவி விண்ணத்து
ஓவறச் சுழலும் என்னுயிர்த் துன்பம்
ஒழித்திரட் சிப்பதென் றிசையாய்;
பூவரும் அயன்வேள் இயமன்ஆம் இகலோர்
போர்க்குடைந் தார்க்கொளி அளிப்ப
மேவரண் ஆகி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 114

91. அறம்-புண்ணியம். மிச்சிரம் - நல்வினை தீவினை ஆகிய இரண்டும் கலந்தது. பாவத்திற்கு இருள் அதாவது நரகம். அறத்திற்கு விண் அதாவது சுவர்க்கம். கலந்ததற்குப் புவி அதாவது இவ்வுலகம் ஒழித்து இரட்சிப்பது. என்று - எந்நாள். இசையாய் - கூறுவீராக. பூ வரும் அயன் - திருமாலின் உந்திர் தாமரையில் தோன்றிய பிரமன். இகலோர் - பகைவர். உடைந்தார்க்கு தோற்றவர்களுக்கு ஒளி - மறைந்து கொள்வதற்கான இடம், முதனிலைத் தொழிற்பெயர் ஆகுபெயராக ஒளியும் இடத்தை உணர்த்தியது. ஒளி அளிப்ப - மெய்யறிவாகிய பிரகாசத்தைக் கொடுக்க என்றும் இரட்டுற மொழிதலாகக் கொள்க. மேவு அரண்-பொருந்திய பாதுகாப்பான இடம்.

மத்துறு தயிர்போல்க் கலங்குபு மூல
மலத்தினால்த் தட்டழி வேனைச்
சத்துரு என்னக் கருதிநீ அகற்றில்
சகத்தெவர் சரண்எனக் கிசையாய்
ஒத்துறும் என்மைத் துனன்மனை சுதர்கண்
உபாசனை உடையிர்நுந் தமக்கு
மித்துரு நான்என் றோங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 115

92. கலங்குபு - சுழன்று. மூலமலத்தினால் - ஆணவத்தால். தட்டழிவேனை - நிலைகுலையும் அடியேனை. சகத்து - உலகத்தில். இசையாய் - உறுதியாக. ஒத்துறும் - வேறுபாடற்று என்னோடு பொருந்தியுள்ள. மைத்துனன் - திருமால் (வைணவம்). மனை - உமை (சாக்தேயம்). சுதர் - கணபதி, குமரன் (காணாபத்தியம் கௌமாரம்) கண் - சூரியன் (சௌரம்). வைசம் மற்ற ஐந்து சமய வழிபாட்டிற்கும் நட்புடையதே என்பது கருத்து.

தாங்குசற் குணமும் தேங்குபத் திமையும்
சகலகே வலம்அற அருளில் த்
தூங்கசிற் சுகமும் தரஅடி யேன்முன்
தோன்றிடத் ததிஇது கண்டாய்;
பூங்குழல்க் கவுரி மொழிஎனப் புறத்தான்
புரக்கும் ஆ ணாயர்நம் பவர்தம்
வேய்ங்குழற் குவந்து விளங்குதன் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 116

93. தாங்கு-ஆதரிக்கின்ற. தேங்கு - நிறைந்த. சகலம் - ஆன்மா உடலோடு கூடிய இயங்கும் நிலை. கேவலம் - ஆன்மா தனித்துக் கிடக்கும் நிலை. தூங்கு சிற்சுகம் -''தூங்காமல் தூங்கிச் சுகப்பெருமான் நின்றிறைவில் நீங்காமல் நிற்கும் நிலை'' (தாயுமானவர் - காண்பேனோ என் கண்ணி 10). ததி-சமயம். கவுரிமொழி வேய்ங்குழற்கு உவமை, ஒருவகையில் விபரீத உவமை எனலாம். ஆண் புரக்கும் - பசுக்களைப் பாதுகாக்கும். ஆனால் நாயனார் வரலாறு வெளிப்படை. வேய்ங்குழல்-மூங்கிலாலான குழல், புல்ஆம் குழல் என்பதும் இது பற்றியே.

ஆடர வினம்தோய் புற்றுறழ் உடலில்
அமைந்து, நான் படும்துயர் அறிந்தும்
நீடருள்க் கடல்-நீ அருளிலை; வறிதே
நீக்கிடில் என்செய்வேன் அடியேன்?
காடமை மாக்கொல் வேடருக் கன்றிக்
கருத்துள்மாக் கொன்றிடும் தவமெய்
வேடர்கட் கிடமா விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 117

94. ஆடு - ஆடுகின்ற. புற்றுஉறழ் - பாம்புப் புற்றினைப் போன்ற, பல தொளைகளை உடையதாலும் அழியும் தன்மை உடையதாலும்

உடலுக்கு உவமை. காடு அமை மா - வனத்தில் உள்ள விலங்குகள். கருத்துகள் மா - உள்ளத்தில் உள்ள காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்சரியம் ஆகிய விலங்குகளை, ஐம்புலன்கள், உட்பகைகள் ஆகியவற்றை யானைகளாக உருவகித்தல் இலக்கிய மரபு. மெய் தவ வேடர் என மாறுக, உடலில் தவத்திற்குரிய வேடம் பூண்டவர், தவச் சின்னங்களை அணிந்தவர்.

வேட்டைத்தொழில் செய்பவர்களை இயற்கையான வேடர்கள் என்றும், தவ வேடம் பூண்டுள்ள முனிவர்களைச் செயற்கை வேடர் என்றும் இந்நூலாசிரியர் கூறுகின்ற,

''செயற்கை வேடம் இட்டபற்ப லோர்கள்வெள்ளி வெற்பிடம் சேர்ந்துகந்த மூலம்ஆதி தின்றெமக் கிசைந்துள்ளார்;................'' இயற்கை வேடர் வெற்பகத்தியற்கை தேர்தரானை வென்று (திருப்பேரூர்க்கலம்பகம் 54) என்னும் பகுதி ஒப்பு நோக்கத்தக்கது.

மண்எனப் பொன்பெண் எனப்படு பொருளின்
மயங்கும் என்நெஞ்சைநின் ஞான
விண்எனத் திகழும் திருஉருக் கண்டு
விரகம்மிக் கிசைதரப் புரிவாய்;
திண்எனும் சிலையா விளங்கினும் இவைதன்
தீஞ்சொல்கேட் டார்அழல் அமைந்த
வெண்நெய்ஒத் துருகும் அருள்கொள்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 118

95. மண்பொன்பெண் - மூவாசைகள். ஞானவிண் - அறிவுப் பெருவெளி, சிதாகாசம். விரகம் - பெருங்காதல். திண் எனும் கடினமான. சிலையா - கல்லாக. சிவை - உமாதேவி கேட்டு ஆர் அழல் - பொருந்தியுள்ள தீ. (95)

கருக்கடல் போகக் கடல்கலை ஆதிக்
கடல்எலாம் தாண்டினோர் மூழ்கும்
திருக்கடல் ஆகும் நினதுபூ ரணத்தில்
சிறியனேன் றனைஎடுத் தாழ்த்தாய்;
மருக்கமழ் சுரர்ஐந் தருத்தருக் கொழிய
மகிமைபல் லாயிரம் கொண்ட
விருக்கம்எண் ணிலகொண் டோங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 119

96. கரு - பிறவி. போகம் - ஐம்புல இன்பத்துய்ப்பு. கலை - கல்வி கேள்வி தொழிற்பயிற்சிகள். ஆதி - முதலிய பல. எடுத்து - (தாழ்நிலையிலிருந்து) தூக்கி. மருக்கமழ் - நறுமணம் வீசுகின்ற. சுரர் ஐந்தரு - தேவலோகத்தில் உள்ள அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் ஆகிய ஐந்து மரங்களின் தருக்கு ஒழிய - கருவம் அழியுமாறு. விருக்கம் - மரம். எண் இல மிகப் பல. வெள்ளியங்கிரியின் மரங்களின் மகிமைகளைப் பேரூர்ப் புராண விம்மிதப்படலத்தின் 2,3,4 ஆம் செய்யுள்களில் காண்க.

தருப்பயில் உலகத் திருப்பதும் நரகில்ச்
சார்வதும் கனவெனப் புரிநின்
திருப்பத கமலத் திசையும்மெய் அன்பில்த்
திளைத்திட அடியனேற் கருளாய்;
பொருப்பன்நன் மகள், தன் பொருப்பன தனத்தைப்
பொருவதிஃ தென்னமெச் சுறள்போல்
விருப்பம்மிக் கமைய விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 120

97. தருப் பயில் உலகத்து - ஐந்து தெய்வ மரங்களுக்கு இடமான சுவர்க்கத்தில் கனவு என - நிலையற்ற சொப்பனம் போன்றது என்று வினைப் பயனாக வரும் இவை உரிய காலம் கழிந்தால் நீங்கிவிடும். இசையும் - பொருந்துகின்ற. பொருப்பன் - மலையரையன், இமவான். பொருப்பு என தனத்தை - மலையைப் போன்ற கொங்கையை, தொகுதி ஒருமை. பொருவது - போன்றது. இஃது என்ன - இந்த வெள்ளிமலை எனக் கருதி.

ஒவ்வருள்த் துணைநீ; புன்புலம் பகைஎன்று
ஓர்கிலேன் உலகின்மா னிடரைத்
தெவ்வர்கள் இவர்கள், இவர்உற வென்னச்
சிந்தைசெய் தவத்தளில்த் திரிந்தேன்
செவ்வருள்க் கடல்நேர் தீர்த்தம்மூழ் குநர்க்குள்ச்
சேர்பசு உணர்வில்மெய்ப் போத
வெவ்வொளி வழங்கும் அளிகொள்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 121

98. ஒவ்வு ஆன்மாவிற்கு இயற்கையாகப் பொருந்திய. புன்-கிழிந்த. புலம் - ஐம்புலன்கள். ஓர்கிலேன் - உணராதவனாகி, முற்றெச்சம்.

தெவ்வர்கள் – பகைவர். சிலரைப் பகையாகவும் சிலரை உறவாகவும் கருதி. அவத்தினில் – பயன் இல்லாமல், ''அவரவருக்குள்ளபடி ஈசன்அருளாலே அவரவரைக் கொண்டியற்று மானால் – அவரவரை நல்லார்பொல்லார் என்று நாடுவதென்? நெஞ்சமே! எல்லாம் சிவன்செயல்என் றெண்'' ''சத்துருவும் மித்துருவும் தாரணியில் வேறில்லை; சத்துருவும் மித்துருவும் தன்நெஞ்சே'' என்றும் சிவபோகசார வெண்பாக்கள் (73,93) இங்கே சிந்திக்கத்தக்கன. செல் – செப்பமான. உள் சேர் – மனத்தில் தோன்றுகின்ற. பசு உணர்வு இல் – நான் ஆன்ம வர்க்கத்தைச் சேர்ந்தவன் என்றும் உணர்ச்சி இல்லாததாகிய மெய்ப்போதம் – சத்திய ஞானத்தையும், இரட்டுற மொழிதலாக உடல் சடப்பொருள் ஆகும் என்கின்ற அறிவினையும் என்றும் கொள்க. இப்பொருளில் பசு உணர்வின் என உவமையாக்குக. வெவ் ஒளி வழங்கும் – வெப்பத்தையும் பிரகாசத்தையும் அளிக்கின்ற. அளி கொள் – கருணை கொள்க.

பொதுவாக நீருள் மூழ்கினால் குளிர்ச்சியும் இருளும் தோன்றும். அருள்க் கடலாகிய தீர்த்தம் வெப்பத்தையும் ஒளியையும் தருகிறது என்றது நயம்.

நச்சுரறழ் ஐம்பா ணத்தறி விழந்து
நாரியர்ச் சரண்புக, மீட்டும்
அச்சுறக் குன்றேற் றினர்கருக் குழியில்
ஆழ்த்தநொந் துனைச்சரண் ஆனேன்;
பச்சுரு உமையாள் தழுவிய மேனிப்
பால்உறும் ஐம்முகம் போல
மெச்சும்ஐந் திலிங்க உருக்கொள்தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 122

99. நச்சு உறழ் – விடத்தைப் போன்ற ஐம்பாணத்து – காமனின் ஐந்து மலர்க் கணைகளால். மீட்டும் அச்சு உற – மறுபடியும் ஓர் உடல் பொருந்தும்படி, மீண்டும் பிறந்து. குன்று ஏற்றினர் – மலைகளைப் போன்ற நகில்களின் மீது ஏற்றி, முற்றெச்சம். கருக்குழி – பிறவியாகிய பள்ளத்தில். குன்றில் ஏற்றிக் குழியில் ஆழ்த்த என முரண்படக் கூறியது ஒரு நயம். பச்சுரு பசுமையான நிறத்தை உடைய. சிவபெருமானுக்கு ஐந்து முகங்கள். அதுபோல வெள்ளியங்கிரித் தொடருக்குச் சிவகிரி, சத்திகிரி, குமாரகிரி (மருதமலை) விட்டுணு கிரி, பிரம கிரி என ஐந்து மலைகள்.

மூத்திரக் குழியில் விழுந்துநார்க் காளாய்
மூத்திர வாதினை லமயிலில்த்
நேத்திரம் புரிவான் எனக்கருள் நினைக்குத்
தொண்டனேன் ஓர்வகைமா றறியேன்
எத்திரும் கயிலை நந்திஎம் பெருமாற்கு
இல்லைஎன் வாதிறுந் தோறும்
வேத்திரம் உதவி விளங்குதென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 123

123. விழுந்துநார்க்கு - தள்ளுகின்ற பெண்களுக்கு. மூத்து - முதுமை அடைந்து. இராவது - இறந்து போகாமல். புரிவான் செய்யுமாறு. எத்து நந்தி கயிலை நந்தி எனத் தனித்தனி இயையும். இறுந்தொறும் - உடைந்து போகும் போதெல்லாம். வேத்திரம் - பிரம்பு. வெள்ளியங்கிரியில் பிரம்பு ஏராளமாக விளைகிறது என்பது செய்தி. "வாள் ஆகிய கண் உமைபாகன் மருவு ஓலக்கம் சேவிப்பான் ஆள்ஆகிய மால்அயன் முதலோர் அடுத்துவேண்டக் கடைக்கணித்துக் கோள் ஆகிய வேத்திரம் அசைந்து குலவ அருளும் நந்திபிரான் "(திருவாரூர் தியாகராச லீலை - கடவுள் வாழ்த்து 31) என்பதால் திருநந்தி தேவரின் இயல்பை அறியலாம்.

இச் செய்யுளின் முதற்சொல்லைப்பற்றி அ. கந்தசாமிப் பிள்ளையவர்கள் தம் மூன்னுரையில், "100 ஆம் பாடலில் மேலோர் அவைக்களத்துக் கூறலாகாத அவையல் கிளவி காணப்படுகிறதே எனின் 'இரும்பை இரும்பால் வெட்டுக' என்றும் விதிபற்றி, இழிந்தோர்களை இழிந்த சொற்கொண்டே இடித்துக்கூறித் திருத்தல் வேண்டலின் அதுவும் சுவாமிகள் கருணையாற் கூறியதன்றிப் பிறிதன்றென்க" (1938 ஆம் ஆண்டுப் பதிப்பு பக்.9) எனச் சமாதானம் கூறியுள்ளார். இது நம் சுவாமிகளாகத் தாமே புதியதாகக் கூறவில்லை. "மலம்சொரிந்து இழியும் வாயிற்கு அருகே சலம் சொரிந்து இழியும் தண்ணீர் வாயில் "(கச்சித் திருவகவல் 61,62. மேலும் இதே அகவலின் 44 முதல் 62 வரையான அடிகளைக் காண்க), "நாறும்குருதிச் சலதாரை" முதலியன (காளத்திடப் பாடல்கள் 75) "சீயம் குருதிச் செழுநீர்" முதலியன (பொதுப்பாடல்கள் 101, 119, திருவாரூர் வெண்பா 160) என்பன போலப் பல பாடல்களில் பட்டினத்தார் கூறியுள்ளதையே இவர் வழிமொழிகிறார். எனவே தவத்திரு. கந்தசாமி சுவாமிகளின் வாக்கில் அவையல் கிளவி இருப்பதாகக் கொண்டு சமாதானம் சொல்ல வேண்டுவதில்லை.

எப்பவத் திழைத்த பெரும்தவத் தாலோ
எனதுபாக் கியமதாய் முத்தி
வைப்பதாய்த் திகழும் உனைத்துதித் திறைஞ்சும்
வாழ்வுபெற் றுய்ந்தனன் அடியேன்;
ஒப்பரு வடிவம் கண்டவர்க் கென்றூழ்
உடல்முன்ஊ ழால்வரும் துன்ப
வெப்பறுத் தின்பம் வழங்கு;தென் கயிலை
வித்தகா! சத்திநா யகனே! 101

101. எப் பவத்து – எந்தப் பிறப்பில். முத்தி வைப்பு அது ஆய் – வீட்டுப் பேறு ஆகிய கருவூலமாக, அது பகுதிப்பொருள் விகுதி. துதித்து இறைஞ்சும் என்றூழ் – சூரிய வெப்பத்தைப் போல. உடல் – இப்போதைய சரீரத்தின். முன் ஊழால் வரும் – பழம் பிறவிகளின் தீவினைப் பயன்களாக உண்டாகும் துன்பவெப்பு என்றதால் முன் ஊழ் என்றமழி தீவினை உன உரைக்கப் பெற்றது.

ஈற்றுப் பாடலாகிய இவ்விருத்தத்தில் ''துதித்து இறைஞ்சும் வாழ்வுபெற்று அடியேன் உய்ந்தனன்'' எனக் கூறிய அதனால் இம்மாலையைப் பாராயணம் செய்து வழிபடும் அன்பர்களும் உய்வர் என நூற்பயனைக் குறிப்பால் உணர்த்தியுள்ளார்.

## 4. வெள்ளிவெற்புச் சிலேடை வெண்பா

இவ்வெண்பா மாலைக்குப் பொருள் வரைகையில் சிலேடையில் முதலில் வெள்ளியங்கிரிக்கான பொருளும் அடுத்து மற்றதற்கான பொருளுமாகக் கூறப்படும்.

*அத்திஅணி யால்அம் பரவதின்மைக் கண்டத்தால்*
*ஒத்திறைவன் ஆகும்வெள்ளி ஓங்கலே-பத்தித்*
*துறைமருவும் தீரத்தார் சோர்வறுக்கும் கொன்றை*
*நறை மருஉந் தீரத்தார் நாடு.* **125**

மலை:- *அத்தி அணியால்* – அத்திமரங்களின் வரிசையால், ஆணைக் கூட்டத்தால் எனினும் ஆம். *அம் பரவ தில் மை கண்டத்தால்* – எழில் இடங்கள் தோறும் பரவுவதால் விரும்பப்படுகின்ற மேகங்கள் ஆகிய திரைச்சீலைகளைப் பெற்றிருப்பதால்.

சிவபிரான்:- *அத்தி அணியால்* – எலும்புகளாலாகிய அணிகலன்களால். *அம்பர அதில் மை கண்டத்தால் கடலில்* – தோன்றிய நஞ்சு அமைந்த கழுத்தால்.

*1.* ஒங்கல்-மலை. பத்தித்துறை – அன்புநெறி. தீரத்தார் – மனவலிமை மிக்க அடியார்கள். சோர்வு அறுக்கும். மருநறை என மாறுக, மணம் நிறைந்த தேன். உந்து – வடிதலால் ஏற்படும். ஈரத்தார் – ஈரத்தன்மையை உடையவரின். நாடு – இருப்பிடம் ஆகும்.

குளத்தடங்கண் வாய்த்துவரங் கொண்டல்படி ஓதி
வளத்துமைநேர் வெள்ளி வரையே-சளத்தமயல்ப்
போகமதிப் புன்குடிலர் பொன்றுநகையொன்றுகொன்றை
நாகமதிப் புன் குடிலர் நாடு. **126**

மலை:- *குள தடங்கள் வாய்த்து* – தெப்பக்குளம் முதலிய நீர் நிலைகளைத் தன்பாற்பெற்று. *வரம் கொண்டல் கடி ஓதி வளத்து* – விரும்பத்தக்க காற்று வீசுகின்ற பூம்பொழில்களின் நெருக்கமாகிய வளப்பத்தால், கொண்டல் என்பது பொதுப்பொருளில் நின்றது.

உமை:- *குளதட கண் வாய்த்து* – நெற்றியில் அகன்ற விழியைப் பெற்று, அம்பிகைக்கும் நெற்றிக்கண் உண்டு. *வரம் கொண்டல் கடி ஓதி வளத்து* – மேன்மையான மேகத்தைத் தோற்கடிக்கின்ற கூந்தற் செழிப்பை உடைய.

2. உமை நேர் – உமா தேவியைப் போன்ற. சளத்த – துன்பமயமான. மயல் போக மதி – ஆசையாகிய போக நுகர்ச்சியைப் பெரிதாக

எண்ணுகின்ற. புன் – இழிந்த. குடிலர் – வஞ்சகர்கள் ஆகிய முப்புரத்தார். பொன்றுநகை – அழிகின்ற சிரிப்பு, சிரித்துப் புரம் எரிந்தது வெளிப்படை. ஒன்று – பொருந்திய. கொன்றை. நாகம் – பாம்பு. மதி – பிறை முதலியன. புல் – பொருந்தியுள்ள. குடிலர்-சடையை உடையவர்.

வாலிபம்மிக் கம்பரக்கண் மாதருக்கா வற்றருமால்
மேலிசைந்து மால்நிகர்க்கும் வெள்ளிவெற்பே – மால்
இயைந்த
கொன்றைச் சடையார் குழகாவென் பார்ஏவு
ஒன்றைச் சடையார்தம் ஊர். 127

மலை:- வால் இபம் மிக்கு – இளமையான யானைகள் மிகுந்து, யானைக்கு வாலால் பெருமை இன்மையின் இளமைப்பொருள் கொள்ளப் பெற்றது. அம்பரக்கண் – வானுலகில் உள்ள. மா தரு – பெருமை மிக்க ஐந்து மரங்களுக்கும் காவல் தரு மால் – அரணாக விளங்குகின்ற மேகங்கள், சூழ்ந்துள்ள என்றவாறு. மேல் இசைந்து – தன்மேல் பொருத்தப்பெற்று.

திருமால்:- வாலிபம் மிக்கு – மௌவனப் பருவம் நிறைந்து. அம்பு அரகண் மாதருக்கு-கணையையும் அரத்தையும் போன்ற விழிகளை உடைய மகளிருக்கு. ஆவல் தரும் மால் – விருப்பத்தை உண்டாக்குகின்ற கருமையை. மேல் இசைந்து-தன்பாற் பொருத்தப்பெற்று.

3. மால் இயைந்த – பெருமை பொருந்திய சடை ஆர் – சடையைப் பெற்றுள்ள. குழகா – சிவபெருமானே. என்பார் – என்று வழிபடும் அடியார்கள். ஏவு ஒன்றை – செய்யுமாறு பணிக்கும் ஒரு செயலைச் செய்வதற்கு. சடையார் தம் – வருத்தப்படாதவரின்.

நால்வாயி னங்கலைமா னாமிசைபுல் ஆர்தலில்ப்பூ
மேல்வாழ்வான் ஒக்கும்உயர் வெள்ளிவெற்பே -
போல்வார்இல்
மாதவத்தர் ஆரும் மருவும் திருமறையின்
போத அத்தர் ஆகும் புகல். 128

மலை:- நால்வாய் இனம் – யானைக் கூட்டங்களும். கலை மான் – கலைமான்களும். ஆம் இசைபுல் ஆர்தலில் – ஈரம்பொருந்திய புல்லை உண்பதனால்.

பிரமன்:- நால்வாயின்-நான்கு வாய்களை உடைமையால். அம் கலைமான் நாமிசை புல் ஆர்தலில் – அழகிய கலைமகள் தன் நாவினிடத்தில் பொருந்துதலைப் பொருந்துதலால், புல் – முதனிலைத் தொழிற்பெயர்.

4. போல்வார் இல் – தமை நிகர்ப்பவர்கள் இல்லாத. ஆரும் என்பது அனைவரும் என்னும் பொருட்டு, யாராக இருப்பினும். திருமறையின் போத – தெய்வீகமாகிய வேதங்களால் பெறப்படும். போத – ஞானமய மான. அத்தர் – சிவபெருமான். ஆரும் புகல் – வசிப்பிடம்

வாஞ்சித்த சித்திபுத்தி வல்லவையோர் தோய்ந்துசுக
மீஞ்சித்தஞ் செய்கரிநேர் வெள்ளிவெற்பே-காஞ்சி
உதிக்கும்மரன் றான்ஆகி ஓங்கிஅருள் ஞான
மதிக்குமரன் தாதை மருவு. 129

மலை:- வாம் சித்த சித்தி – அலைகின்ற உள்ளத்தை நிலை நிறுத்தும் வெற்றி. புத்தி – ஞானம். வல்லவையோர் ஆகியவற்றால் வலிமை மிக்க தவசிகள். தோய்ந்து – வந்தடைந்து. சுகம் ஈ சித்தம் செய் – பேர் இன்பத்தைத் தருகின்ற துறவைக் கொண்டொழுகுகின்ற. ஈச்சித்தம் என்ற பாலது எதுகை நோக்கி ஈஞ்சித்தம் என மெலிந்தது.

விநாயகர்:- வாஞ்சித்த-தம் மேற் காதல் கொண்ட. சித்தி புத்தி வல்லபை ஆகிய தேவியர்களை. தோய்ந்து – அணைந்து. சுகம் ஈ சித்தம் செய் – காதல் மகிழ்ச்சியைத் தரக் கருதிகின்றவராகிய. கரி – யானை, விநாயகர்.

5. காஞ்சி உதிக்கும் – நொய்யலாறு உற்பத்தி ஆகும். மரன் தான் ஆகி-வன்னிமரமே தான் ஆகி, சிவபெருமானின் வடிவமாகிய மலையின் வலதுபுறம் காதடியில் உள்ள உரோமம் ஆன வன்னி மரத்தினடியிலே கங்கை காஞ்சிமா நதியாகத் தோன்றினாள் என்பது தலபுராணம் (தீர்த்தப்படலம் 14). ஞானமதி-மெய்ஞ்ஞானத்தை அறிந்த. குமரன்-முருகப் பெருமானின். தாதை-தந்தையின். மருவு – இருப்பிடம்.

ஆறுமுகம் வேடர் அணிக்காதற் கொள்மயில்ஊர்
வேறுதையும் கந்தன்ஒக்கும் வெள்ளிவெற்பே-மாறு
பட்ட புரத் தானவரைப் பல்லூர் நகையால்
அட்ட புரத்தான் அமர்வு. 130

மலை:- ஆறு முகம்-நதிக்குப் பிறப்பிடம். வேள் தரணி – மண்ணாலாகிய நிலப்பரப்பு. காது அல் – துன்புறுத்துகின்ற இருட்டு. கொள் – குடை வேல மரம். மயில் – மை இல், மேகத்திற்கு இடம் ஆம் தன்மை. ஊர் வேல் – (உயரமாக) ஓதிக்கொண்டே போகும் வேல மரம், வினைத்தொகை. துதையும் – நெருங்கியுள்ள.

கந்தன்:- ஆறுமுகம். வேடர் அணிக் காதல் – குறிஞ்சிநில மக்களால் விரும்பப்படுதல். கொள்மயில் ஊர் ஏற்றுக்கொண்ட மயிலில் இவர்தல், ஊர் முதனிலைத் தொழிற்பெயர். வேல் – வேலாயுதம்.

6. மாறுபட்ட – பகைகொண்ட. புர தானவரை – முப்புரத்து அசுரர்களை. பல் ஓர் நகையால் – பல்லுக்குமட்டும் தெரிந்த சிரிப்பால், சிறிய புன்னகையால், அட்ட – கொன்ற. புரத்தான் – உடலை உடைய சிவபெருமானின். அமர்வு – வாழிடம்.

தானவரை யங்கிளைக்கத் தண்டங்கண் டம்பரந்தோய்
வேனயக்கும் கையன்நிகர் வெள்ளிவெற்பே-ஞான அருள்க்
கற்புடையாள் வான்தலத்தைக் காத்தருள்சேய் நல்குமையாள்
தற்புடை யான்வான் தலம். 131

மலை:- தான வரை – மதம் பொழிகின்ற மலையைப் போன்ற யானை. அம் கிளைக்க – அழகு அதிகரிக்க. தண்டம் கண்டு – தான் செல்வதற்குரிய வழியை அறிந்து. அம்பரம் தோய் – வானுலகைச் சென்றடைகின்ற. மலை வானளாவியது என்பது கருத்து.

முருகன்:- தானவரை அங்கு இளைக்கக் கண்டு – அசுரர்களைத் தோற்கடித்து (அங்கு-அசை) அம்பரம் தோய் வேல் நயக்கும் கையன் – கடலிற் பொருந்துகின்ற (சூரனைப்பிளக்க) வேலாயுதத்தை விரும்பியேற்ற கரங்களை உடையவன்.

7. ஞான அருள்க் கற்பு உடையாள். வான் தலத்தை – தேவ லோகத்தை. சேய் – மைந்தனை, முருகனை. நல்கும் – தருகின்ற. உமையாள் தற்புடை – உமா தேவியைத் தன் (இடது) பக்கத்தில் ஆள்வான் – கொண்டிருப்பவ ராகிய சிவபிரான்.

மாலணையுங் காமருவி வாரமிக்குப் பூவிழித்து
மேலமையும் பொன்நேரும் வெள்ளிவெற்பே-காலன்அகம்
சிந்தத் திருப்பத்தர் சீர்மார்க்கண் டன்கொள்அர-
விந்தத் திருப்பதத்தர் வீடு. 132

மலை:- மால் அணையும் கா மருவி – மேகங்கள் பொருந்துகின்ற சோலைகளைப் பெற்று. வார் அம்மிக்கு பூ இழிந்து – வடிகின்ற தண்ணீர் (அருவி) மிகுந்த மலர்களைக் கீழே இறக்கி.

திருமகள்:- மால் அணையும் காமரு-திருமாலால் அணைக்கப்படும் அழகும். விவாரம் மிக்கு – உறுதியான அன்பும்மிகுந்து. பூ விழித்து – தாமரை போன்ற கண்களால் நோக்கி. மேல் அமையும் – (அவருடைய) மார்பின் மீது இருக்கும். பொன்-இலக்குமி.

8. காலன் அகம் சிந்த - இயமன் தன் செருக்கை நீக்குமாறு திருப்பு அதத்தர் - மாற்றுகின்ற சங்கார கர்த்தா. சீர்-சிறந்த. அரவிந்த - தாமரை போன்ற. திரு - தெய்வீகமாகிய பதத்தர் - திருவடிகளை உடையவர்.

கஞ்சத் தவளமொன்றிக் கானவரம் பைப்பெறலால்
விஞ்சக் கலைமானாம் வெள்ளிவெற்பே-வஞ்சத்து
இருப்பு மரன்நேர் இதயரும் முன் எய்தில்த்
திருப்பும் அரன்நேர் செறிவு. 133

மலை:- கம் சத்த வளம் நன்றி - தண்ணீரின் ஒலியாகிய வளப்பம் மிகுந்து, சத்தகம் வளம் எனினும் ஆம். கானவர் அம்பைப் பெறலால் - காட்டு வேடுவர்கள் செலுத்துகின்ற கணைகளைத் தன்பாற் கொள்ளுதலால்.

கலைமகள்:- தவளக் கஞ்சம் ஒன்றி என மாறுக. வெள்ளைத் தாமரையில் வீற்றிருந்து. கான வரம்பைப் பெறலால் - இசைக்கலையின் மேல் எல்லையைப் பெற்றுள்ளதால். விஞ்சு - பெருமை மிக்க. நெஞ்சறி சுட்டு.

9. வஞ்சத்து-வஞ்சகத்தன்மையில். இருப்பு - இரும்பைப் போலக் கடுமையாகவும். மரன் நேர் - மரத்தைப்போல உணர்ச்சியற்றும் உள்ள. இதயரும் - உள்ளத்தினர்கள் கூட, இழிவு சிறப்பு. முன் - எதிரில். திருப்பும் - (இரக்கம் உள்ளவர்களாக) மாற்றிவிடுகின்ற. நேர் செறிவு - பொருந்துமிடம், வினைத்தொகை.

வெள்வா ரணம்கருமை மேற்கொண் டெறிந்துவைரம்
விள்வா சவன்கடுக்கும் வெள்ளிவெற்பே-உள்வார்
இடர்அகல நீற்றும் உமையாளின் கொங்கை
படர்அகல நீற்றுவார் பற்று. 134

மலை:- வெள் வாரணம் - வெண்மையான சேவல்களையும். கரு மை மேற்கொண்டு - கரிய ஆடுகளையும் தன்பால் வசிக்கப்பெற்று. வைரம் எறிந்து - பலவகையான மணிகளையும் வெளிப்படுத்தி. வயிரம் உபலட்சணம்.

இந்திரன்:- வெள் வாரணம் - வெண்மை யானையாகிய ஐராவதத்தையும். கரு மை - கரிய மேகங்களையும். மேற்கொண்டு - ஊர்தியாக ஏற்று. வைரம் எறிந்து என மாறுக. வச்சிரப்படையைச் செலுத்தி. விள் - சொல்லப்படுகின்ற. வாசவன் - இந்திரன்.

10. உள்வார் – தன்னை நினைப்பவர்களின். இடர் – துன்பங்கள். நீற்றும் – அழிந்துவிடுகின்ற. படர் – பரவுகின்ற. அகல – மார்பில் நீற்றுவர் – திருநீற்றை அணிந்துள்ளவரின்.

வேழத் திருக்கைஅம்பு மீனத் துவசத்தின்
வீழ்அனங்க வேள்புரையும் வெள்ளிவெற்பே-மேழகத்தின்
வத்திரத்தல் நந்தரக்கி மெய்த்துணைஆ னாரைக்கொல்
சத்திரத்தன் அத்தர்அமை சார்வு. 135

மலை:- வேழத்து இருக்கை – யானைகளின் இருப்பிடமாக இருப்பதாலும். அம்பு – நீர் நிலைகளாலும். வசத்து மீனின் – தன்பாற் பொருந்தியுள்ள நட்சத்திரங்களாலும்.

மன்மதன்:- வேழ திரு கை – கரும்பை(வில்லாக) ஏந்திய அழகிய கரத்தாலும். அம்பு – (மலர்க்) கணைகளாலும். மீனத்துவசத்தின் – கயற் கொடியினாலும். வீழ் – அனைவராலும் விரும்பப்படுகின்ற. அனங்க வேள் – உடல் அற்றவனாகிய காமனை. புரையும் – நிகர்க்கும்.

11. வேழகத்தின் வத்திரத்து – ஆட்டின் முகத்தை உடையவளும். அல் நத்து – இருளை விரும்புபவளும் ஆகிய, (அரக்கர்கள் இருளில் இயங்குபவர் – நிசாசரர் ஆவர்) இனி இருட்டு தன் இனம் எனக் கருதி விரும்புமளவு கரியநிறம் கொண்ட எனினும் ஆம். அரக்கி – அயமுகி என்னும் இராட்சசியின். மெய்த்துணை ஆனாரை – உடன்பிறந்தார் ஆகிய சூரபதுமன் முதலியோரை. கொல் சத்திரத்தன் – கொன்ற வேலாயுதனின். அத்தன் – தந்தை. அமை – பொருந்தியுள்ள. சார்வு – இடம்.

ஆறு படிந்தினனேர் அம்பிறைந்துண்டாந்தரத்தால்
வீறும் அந்த ணர்க்கடுக்கும் வெள்ளிவெற்பே-சீறு
அரவப் பணித்தார் அகலத் துமையாள்
விரவப் பணித்தார்அம் வீடு. 136

மலை:- ஆறு படிந்து (விலங்குகள் வேடர்களின் நடமாட்டத்தால் வழித்தடங்கள் உண்டாகி. இனன் நேர் அம்பு இறைந்து – சந்திரனைப் போலக் குளிர்ந்தநீர் மேலே இருந்து சிதறி (பாய்ந்து,அருவி) உண்டாம். தரத்தால் – மீண்டும் நீர்நிறையும் தன்மையால்.

அந்தணர்:- ஆறுபடிந்து – நதியில் நீராடி, ஆறு அங்கங்களை உடைய வேதநெறியில் ஒழுகி எனினுமாம். இனன் நேர் – சூரியனுக்கு எதிரில். அம்பு இறைந்து – நீரை அருந்தியமாகச் சிந்தவிட்டு. உண்டாம் தரத்தால் – உயர்வைப் பெறுகின்றதால். வீறும் சிறப்பு மிக்க.

12. சீறும் அரவப் பணி - சீறுகின்ற பாம்பாகிய அணிகலன்களை அணிந்ததும். தார் - மாலைகளை அணிந்ததும் ஆகிய. அகலத்து - (தம்) மார்பில், ஆகுபெயராக முழு உடலை உணர்த்திற்று. உமையாள் விரவப் பணித்தார் - இறைவியைப் பொருந்துமாறு செய்தவராகிய சிவபெருமானின். அம் - அழகிய

தானக்கை வாய்த்திரட்சித் தண்டம் பலசமைந்து
வேனற்கை வேந்தர்ஒக்கும் வெள்ளிவெற்பே-மீனத்
துவசத்தன் அங்கண் தொலைய விழித்த
தவசத்தன் அங்குஅண் தலம். 137

மலை:- தான - மதநீரையும். கைவாய்த்திரட்சி - துதிக்கையில் வாயையும் உடைய யானைக்கூட்டங்கள் நடமாடுகின்ற, நால்வாய் போலக் கைவாய் என ஆட்சி. தண்டம் பல சமைந்து - யானைப்பாதைகள் நிறைய அமைந்து.

மன்னர்:- தானக்கை வாய்ந்து - ஈகையை உடைய கரங்கள் அமையப் பெற்று. இரட்சித்து - குடிகளைப் பாதுகாத்து. அண்டம் பல சமைந்து - பல நாடுகளைத் தன் நாட்டுடன் இணைத்துக்கொண்டு, அண்டம் என்பது உலகத்தைக் குறிக்காமல் நாடு என நின்றது. வேல் நல் கைவேந்தர் - ஆயுத மேந்திய வலிய கரங்களை உடைய மன்னர்.

13. மீனத்துவசத்தன் - கயற்கொடியோன், மன்மதன். அங்கண் - அந்த இடத்திலேயே. தொலைய - ஒழியும்படி. விழித்த - பார்த்த. தவசு அத்தன் - தவத்தினை உடைய சிவபெருமான். அங்கு அசை. அண் - பொருந்துகின்ற.

பத்திப் பொருள் ஏற்று பாசமுற்ற வீத்தொளியுள்
வித்திசைசால் வைசியர் நேர் வெள்ளிவெற்பே-மொய்த்த
பார் உரிமை வேடர் பரிவால் அமையானை
ஈர் உரிமை வேடர் இடம். 138

மலை:- பத்திப்பொருள் ஏற்று - அடியார்களின் அன்பை மட்டுமே காணிக்கையாக ஏற்றுக்கொண்டு. பாசம் முற்ற வீத்து - மலங்களை முழுமையாக அழித்து. ஒளியுள் வித்து - ஞானமயமான முத்தி நிலத்தின் விதைக்கின்ற, வீட்டுப்பேறளிக்கின்ற. இசை சால் - புகழ்மிக்க.

வைசியர்:- பத்திப்பொருள் ஏற்று - வரிசையாகத் தம் வணிகத் தொழிலுக்குரிய பண்டங்களைக் கொண்டு. பாசமுற்ற - (தொழிலில்) விருப்பம் மிக. வீ தொளியுள் - தானியங்களைக் கருப்பமுறச் செய்கின்ற சேற்றில், வினைத்தொகை. வித்து - விதைக்கின்ற. இவர் பூ வைசியர்.

14. மெய்த்த – உண்மையான. பார் உரிமை வேடர் – இந்தக் குறிஞ்சி உலகத்திற்கு உரியவர்களாகிய வேடுவர்கள். பரிவால் அமை அன்பொடு பொருந்தி வாழ்கின்ற. அமை இடம், வேடர் இடம் எனத் தனித்தனி இயையும், யானை ஈர்மை உரிவேடர் – யானையின் ஈரமும் கருமையும் உடைய தோலை அணிந்த வேடதாரியாகிய சிவபிரானின்.

வேளாண்மை கண்டுகளி மிக்குப் புலவர்கலி
மீளா தருள்வார் நேர் வெள்ளிவெற்பே-நீளாமுடி
பத்துத் தரித்தான் பவிசழித்தான் மேற்கருணை
வைத்துத் தரித்தான் பதிவு. 139

மலை:- வேள் ஆண்மை கண்டு – முருகப்பெருமானின் வீரத்தைப் பார்த்து களி மிக்கு – பெருமகிழ்ச்சி கொண்டு. புலவர்கலி மீளாது அருள்வார் – தேவர்களின் துன்பம் மறுபடியும் ஏற்படாமல் காப்பாற்றுகின்ற சிவபிரான்.

வேளாளர்:- வேளாண்மை கண்டு – விவசாயத் தொழில் புரிந்து களிமிக்கு – எப்பொழுதும் மன நிறைவு பெற்று. புலவர் கலி மீளாது அருள்வார் – கற்றவர்களை மீண்டும் வறுமை அண்டாதவாறு பெருங் கொடையளிப்பவர்.

15. நீளாமுடி பத்து தரித்தான் – நீண்ட மகுடங்கள் பத்தினை உடைய இராவணன் ஆகிய பவிசு அழித்தான். மேல் – தன் இருப்பிடத்தையே தூக்க முயன்று அதனால் தன் பெருமைக்குப் பங்கம் விளைவித்தவன்மீதே. கருணை வைத்து-இரக்கம் கொண்டு. உத்தரித்தான் -அவன் குற்றத்தைப் பொறுத்து அருள்புரிந்தவர். பதிவு-இருப்பிடம்.

நன்றமிழ்த நாவமைந்து நாகவரம் பைக்கனியை
மென்றளிதோ யும்புலவர் வெள்ளிவெற்பே-ஒன்றசலம்
தூக்கும் கொடியன் அகம் சோரவிரல் ஊன்றியசே
ஆக்கும் கொடியன் அகம். 140

மலை:- நன்று அமிழ்த நா அமைந்து – நல்ல அமுதத்தைச் சுவைக்கின்ற நாக்கினைப்பெற்று. நாக அரம்பை – தேவலோகத்து நாடகமகளிரின். கனியைமென்று – விழிப்பழத்தைப் போன்ற உதடுகளைச் சுவைத்து மகிழ்கின்ற. புலவர் – தேவர்களால் போற்றப்பெறும்.

கவிஞர்:- நன்று அமிழ்த நா அமைந்து – நல்ல அமுதம் போன்ற இனிய தமிழ்ச் செய்யுட்களைக் கூறுகின்ற நாக்கினைப்பெற்று. நாக அரம்பைக்

கனியை மென்று - மலை வாழைப் பழத்தை உண்டு. அளிதோயும் - மகிழ்வடையும். புலவர் - கவிஞர்களைப் போன்ற புலவர் - கவிஞர்களால் புகழ்ந்து பாடுதற்குரிய

16. ஒன்று அசலம் தூக்கும் கொடியன் - தான் பொருந்தி வாழ்கின்ற கயிலாய மலையைத் தன் தோள்களால் பெயர்த் தெடுக்க முயன்றவன் ஆகிய தீய இராவணன். அகம் சோர விரல் ஊன்றிய - உடல் சோருமாறு கால்ப்பெருவிரலைச் சற்றே அழுத்திய இரட்டுற மொழிதலாக அகம் சோர என்பதற்கு அகந்தை அழியுமாறு எனவும் கொள்க. சே ஆக்கும் - எருதின் உருவத்தை வரைந்து செய்யப்பட்டுள்ளதாகிய. கொடியன் - கொடியினை (துவசம்) உடைய சிவபெருமானின். அகம் - வீடு.

> வேடுவரங்க கங்கதிர்கால் வேழமொரு வக்கணையில்
> வீடுறுத்தும் வள்ளிஒக்கும் வெள்ளிவெற்பே-கூடல்ப்
> பதிக்கா வலன்புடையார் பார்க்கஅடி கொண்டாள்
> துதிக்கா வல்அன்புடையார் தோய்வு. *141*

மலை:- வேடுவர் அங்கங்கு அதிர்கால் வேழம் - அந்த அந்த இடங்களில் நிலம் அதிருமாறு ஓடும் கால்களை உடைய யானைகளை வேடர்கள். ஒடுவ கணையில் வீடுஉறுத்தும் - நீக்க அம்புகளால் விட்டுவிலகச் செய்யும். (அதிர்கால் - பிறவினைப் பொருளில் வந்த வினைத்தொகை. வீடு - முதல் நீண்ட முதல் நிலைத் தொழிற்பெயர்)

வள்ளி:- வேள் துவர் அங்கம் - முருகப்பெருமானின் பவளம் போன்ற உடல். கதிர்கால் - ஒளிவீசும் போது, அதாவது காட்சியளித்த போது, வேழம் - (விநாயகர் ஆகிய) யானையை. ஒரு வக்கணையில் - ஒரு சாமர்த்தியத்தால். வீடுறுத்தும் - போகச் செய்யும்.

17. கூடல்ப் பதிக் காவலன் - மதுரையின் அரசனாகிய அரி - மர்த்தன பாண்டியனால். புடையார் பார்க்க - பக்கத்தில் இருந்தவர்கள் எல்லாம் காணும்படி. அடிகொண்டான் துதிக்கு - பிரம்படி பட்டவராகிய மாணிக்கவாசகரின் திருவாசகத் தோத்திரத்திற்கு. ஆவல் அன்பு உடையார் - மேலும் மேலும் வேண்டும் என்றும் ஆர்வமும் நேசமும் உடையவராகிய இப்பெருமானின் தோய்வு - வகிப்பிடம்.

> ஈரப் படர்ச்சியின்முன் எய்தவர்க்கு வான்தரலில்
> வீரர்க் கிணை ஆகும் வெள்ளிவெற்பே-ஊரற்குச்
> சந்தாயும் மானார் தணியாச் சினம்தவிர்த்த
> நந்தாயும் ஆனார்தம் நாடு. *142*

மலை:- ஈரப்படர்ச்சியின் – கருணையின் விரிவால். முன் எய்து அவர்க்கு – தன் எதிரே வருகின்றவர்களுக்குக்கூட, இழிவு சிறப்பும்மை விரிக்க, எய்தவர் எனத்தவசிகளைக் கொண்டால் கருணைக்குச் சிறப்பின்மையில் எய்து அவர் எனக் கொள்ளப்பட்டது. வான் தரலில் – சுவர்க்க போகத்தை அருள்வதால்.

வீரர்:- ஈர்அப்பு அடர்ச்சியின் முன் – பிளக்கின்ற அம்புகளின் நெருக்கத்தின் எதிரே. எய்தவர்க்கு – வருகின்ற வில்லாளிகளுக்கு. வான் தரலில் – கொன்று வீரசுவர்க்கத்தை வழங்குவதால்.

18. ஊரற்கு சந்து ஆயும் – சுந்தரமூர்த்தி நாயனாருக்குத் தூதுவராகவும் ஆகி, சந்தும் ஆய் என உம்மையை மாற்றுக. மானார் – பரவை, சங்கிலி ஆகிய பெண்களின். தணியா – குறையாத. தாயுமானார் – திருச்சியில் இறைவன் திருநாமம், சிவபெருமான்.

மாறா நிலையால்க் கண் மாரியினால்த் தொண்டகத்தால்
வீறார்நா வுக்கரசேய் வெள்ளிவெற்பே-கூறார்
மதிக்கோட ரத்தளகவான் வண்ணம்உணர் வித்தென்
விதிக்கோள்தீ ரத்தகைவான் வீடு. 143

மலை:- மாறா நிலையால் – நிலை குலையாத்தன்மையால். கண்மாரி யினால் – அந்த இடத்தில் பொருந்துகின்ற மேகத்தால். தொண்ட கத்தால் – தொண்டகப்பறை முழக்கால்.

அப்பர்:- மாறா நிலையால் – தம் கொள்கையில் உறுதியாக நின்ற தன்மையால் கண்மாரியால் – பக்திமிகுதியால் வாழ்ந்த கண்ணீர்ப் பெருக்கினால் தொண்டு அகத்தால் – பணி செய்து கிடப்பதே என அதையே நினைத்துக்கொண்டிருந்த உள்ளத்தால். வீறு ஆர் – பெருமை மிக்க.

19. கூறு ஆர் மதிக் கோடீரத் தகை – பிளவுண்ட சந்திரனாகிய பிறை தம் சடையில் அமைந்த தன்மையின். வான் வண்ணம் உணர்வித்து – பெருமை மிக்க விதத்தை உணரச்செய்து, அதாவது தக்கன் சாபத்தால் அழிய இருந்த சந்திரன் தன்னைச் சரணடைந்ததால் அவனுக்கு இரங்கித் தன் சடையில் இருத்தி இறப்பைத் தடுத்த செயல், என் விதிக் கோள் தீர தகைவான் – அடியேனின் ஊழ்வினையாகிய இடையூறுகள் எல்லாம் நீங்கும்படிப் போக்குபவன் ஆகிய சிவபெருமானின்.

முத்தியற்பந் தற்கணிலாய் முத்தியற்பந் தார்க்கருள்மாண்
மெத்தியற்சம் பந்தன்நிகர் வெள்ளிவெற்பே-சத்திக்கு
இடப்பால் அளித்தார் இயன்மறைகட் கெட்டாக்
கடப்பா லளித்தாரன் காப்பு. 144

மலை:- முத்தியற்பந்தற்கணிலாய் – சரியாக விளங்கவில்லை. முத்தி அற்பு அந்தர்க்கு அருள் – மோட்ச விருப்பத்தைத் தன்பால் பொருந்தியவர்களுக்கெல்லாம் ஏற்படுத்துகின்ற.

சம்பந்தர்:- முத்துஇயற் பந்தல்க்கண் நிலாய் – (இறைவனால் அளிக்கப்பெற்ற) முத்துப் பந்தலில் இருந்துகொண்டு, முத்தி அற்பு அந்தர்க்கு அருள்– மேலே கூறியதே இங்கும் பொருந்தும். மான் மெத்து இயல் – சிறப்பு மிகுதியாகப் பொருந்திய.

20. சத்திக்கு – உமாதேவிக்கு. இடப்பால் – இடதுநிலை. கடப்பால் என்றும் பகுதி விளங்கவில்லை. அளித்தாரன் – வண்டுகள் மொய்க்கின்ற மாலையை அணிந்த சிவபிரான்.

> மாணிக்க வாசகத்தின் மன்னிரண மாற்றிடலின்
> மீள்நிலைநீர் வாசகன்நேர் வெள்ளிவெற்பே-பாணித்தே
> யாகும் பரசு, கத்தர்; ஆர்வம்மலி தொண்டர்மனம்
> ஆகும் பரசு கத்தர் ஆர்வு. 145

மலை:- மாண் மிக்க ஆசு – புகழ்மிக்க கரும்புவில்லால் விளைந்த குற்றம் (காமம்).அகத்தி மன் இரணம் ஆற்றிடலின் – உள்ளத்தில் பொருந்தி ஏற்படுத்தும் புண்களைக் குணப்படுத்துவதனால்.

வாகீசர்:- மாணிக்க வாசகத்தின் – மாணிக்கத்தைப் போன்ற அருமையான வார்த்தைகளை அருளியதால். மன் இரணம் மாற்றிடலின் – (பாண்டிய) மன்னன் கொண்ட பண்பை இறுதியில் இல்லாமல் செய்ததால், இனி இரணம் என்பதற்குப் பொன் எனக் கொண்டு பாண்டியனின் பொன்னைக் குதிரை விலையாக்காமல் திருப்பணிச் செலவாக மாற்றியதால் என்றும் அமையும்.

21. பாணித்தே – மதித்தே. யாகும் – யாவரும். பரசு – போற்றுகின்ற, கத்தர் –தலைவர். ஆரும் – பொருந்தியுள்ள. பர சுகத்தர் – பேரின்ப வடிவினர். ஆர்வு – வசிப்பிடம்.

> நாவல்அர சாய்இருமோ னங்கையர்ஆகம்பொருந்தி
> மேவழிகால்ச் சுந்தரன்ஆம் வெள்ளிவெற்பே-கா அகத்தர்
> துக்கம் இகஅயில்வான் தோன்றல்அளித் தார்கலிநஞ்சு
> ஒக்க மிகஅயில்வான் ஊர். 146

மலை:- நாவல் அரசாய் – (திருவானைக்காவில்) நாவல் மரத்தின் நிழலில் உள்ள இறைவனாகியும், இரு மான் அம்கையர் – பெரிய மானை அழகிய கரத்தில் ஏந்தியவரும் ஆகிய சிவபிரான் ஆகம் பொருந்தி – தன் உடலாகவே அமைந்து. மேவு அழகால்.

சுந்தரர்:- நாவல் அரசாய் – சிறந்த கவிதைகளை இயற்றும் நா வல்லமையில் தலைமை மிகுந்தவராக. இரு மால் நங்கையர் ஆகம் பொருந்தி மேவு – தன்மேல்க் காதல் கொண்ட பரவை, சங்கிலி ஆகிய இரண்டு பெண்களோடு கூடி வாழ்ந்த.

22. கா அகத்தர் துக்கம் இக – தேவலோகவாசிகளின் துன்பம் தீரும்படி. அயில் வான் தோன்றல் அளித்து – வேலாயுதம் ஏந்திய சிறந்த குமாரனைத் தோற்றுவித்து. ஆர்கலி நஞ்சு – கடலில் எடுத்த விடத்தை. நச்சு மிக அயில்வான்-முழுமையாக உண்டவராகிய சிவபிரான்.

வானத் தமைவால்விண் மாதர்உவந் தாடலினால்
மீனத் தலைத்தடம்நேர் வெள்ளிவெற்பே-கான
மறையோன் சிரத்தை மருள்அறச்சே தித்த
நிறையோன் சிரத்தை நிலை. 147

மலை:- வானத்து அமைவால் – ஆகாயமளாவி நிற்கும் உயரத்தால். விண்மாதர் உவந்து ஆடலினால் – (அருகாமை பற்றித்) தேவலோகப் பெண்கள் வந்து மகிழ்வோடு விளையாடுவதால். மீனத்தலைத் தடம் நேர் – நட்சத்திரத்திற்குச் செல்லும் வழியைப்போன்ற.

குளம்:- வால் நந்து அமைவால் – ஒளிமிக்க சங்குகள் பொருந்தியிருப்பதால் விண்மாதர்-இளம்பெண்கள். மீனத்தலைத் தடம் நேர் – மீன்களுக்கு இடமாக உள்ள குளத்தைப் போன்ற.

23. கானமறையோன் – இசைபொருந்திய வேதங்களுக்குரிய பிரமனின். சிரத்தை – தலையை. மருள்அற – அவன் ஆணவம் நீங்க. சேதித்த – துண்டடித்த. நிறையோன்-பூரணனாகிய சிவபிரான். சிரத்தை நிலை-அக்கறையோடு இருக்கும் இடம்.

வானரங்கு லாய்விடர்க்குள் வாய்ப்பவளம் ஆரநல்கி
வேனரமா தர்க்கிணைஆம் வெள்ளிவெற்பே-ஈனர்
இகத்திருப்பு மையல் இதயமு(ம்வ) ரில்த்தாள்ப்
புகத்திருப்பும் ஐயன் புகல். 148

மலை:- வானரம் குலாய் – குரங்குகள் மிகுந்து. விடர்க்கு உள் வாய்ப்புப் – மலைப்பிளவுகளுக்கு இடமாக அமைய. வளம் ஆர நல்கி – மலைபடு பொருள்களாகிய செல்வத்தை மிகுதியாக வழங்கி.

தேவலோக மகளிர்:- வான் அரங்கு உலாய் – தேவலோகத்து மன்றங்களிலே உலாவி. விடர்க்கு – காமிகளுக்கு. உள் வாய் பவளம் – அவர்கள் விரும்புகின்ற உதடுகளாகிய பவளத்தை பவளவாய் என

மாறினும் ஆம். இது உவமைத் தொகை. ஆர நல்கி - துய்க்கும்படிக் கொடுத்து. இதழ்க் கெல்பருகக்கருந்து. வேன் - வியன், பெருமைமிக்க. அமரர் - தேவ மகளிர்.

24. சுவர் தெரிந்து இருப்பு மையல் இதயமும் - இழிந்தவர்களின் இவ்வுலகியலில் நிலைத்திருந்து பல இன்பங்களில் ஆசை கொண்டுள்ள உள்ளத்தையும் வரில் - தன்னிடம் வந்தால் தான் புக நிருப்பும் ஜபன் தன் திருவடி ஆகிய சிவனடியில் புகுமாறு மாற்றுகின்ற தலைவரின்.

செய்யுள் மிகுத்தெழுந்து சீர்க்கலைமா னாட்டமுற்று
மெய்உள் புலவர்நிகர் வெள்ளிவெற்பே-பொய்உலகில்த்
தாம்மசரம் அன்னர் தம்முள் உணர்வரிய
நேமசக மன்னர் நிலை. 149

மலை:- செய்புள் மிகுந்து எழுந்து - தினை முதலியன விளையும் புனங்கள் அதிகமாகத் தோன்றி. சீர் கலைமான் கட்டம் உற்று - சிறந்த மான்களில் துள்ளலைப் பொருந்தி.

கவிஞர்:- செய்யுள் - கவிதைகள், கலைமான் நாட்டம் உற்று - சரசுவதியின் உபாசனை பொருந்தி. மெய் உள் புலவர் - நிலையான இறைவனின் திருவருடிகளைக் கருதுகின்ற அறிஞர், கற்றதனாலாய பயன் இறைவன் நற்றானை நினைப்பதே ஆதலில் மெய் உள் என்றார்.

25. பொய் - நிலையற்ற. தாம் - அசைநிலை. மசகம் அன்னர் - கொசுவைப் போன்ற. எழிசனர்கள் நேம உயர்வினைஉடைய. சக மன்னர் - எல்லா உலகல்களுக்கும் தலைவராகிய இறைவன்.

பூத்தண் டலையகலப் பொறப்பாரங் காட்டியமை
மேய்த்தண்கடல் புரையும் வெள்ளிவெறபே-காத்தலம் சார்
உம்பர்அமு சுற்றலைவ தோவவிடம் உண்டருளும்
நம்பர்; அமு தற்றலைவன் நாடு. 150

மலை:- பூ தண்டலை அகல பொறப்பு - மலர்ச் சோலைகள் ஆகிய மார்பின் அழகினையும் (பக்க மலையை மார்பாக் உருவகிக்கிறார்.) ஆரம் காட்டி - சந்தன மரங்களை உண்டாக்கிய அமை மேல் - மூங்கில்களைப் பொருத்தி.

கடல்:- பூத்து அண்டு அலை - தோன்றிக் கரையை நெருங்குகின்ற தரங்கங்களையும். அகவப் பொறப்பு ஆள் அம் காட்டிய மை மேய் - விசாலத்தையும் அழகினையும் பொருந்திய நீர் உண்டாக்கிய கருமை நிறத்தைப் பொருந்தி. தண் - குளிர்ந்த.

26. காதலம் சார் உம்பர் – கற்பக நாட்டைச் சேர்ந்த தேவர்கள். அமுது அற்று அலைவது ஒவ – உணவில்லாமல் திரியும் நிலை நீங்க. விடம் உண்டருளும். நம்பர் – சிவபெருமான். அ முதல் தலைவன் – அகரத்தைப் போன்ற முதன்மையையுடைய இறைவனின்.

அம்மை இடம்பெற் றமைவா னரங்குதித்து
மெய்ம்மைநட ராசனிகர் வெள்ளிவெற்பே - அம்மை
அலைக்கங்கை தம்தாரம் ஆக்கி உமைஅ-
மலைக்கங்கை தந்தார்அம் வாழ்வு 151

மலை:- அம் மை இடம்பெற்று – அழகிய மேகங்கள் தங்கி. அமை வாளரம் குதித்து – மூங்கில்களில் குரங்குகள் கூத்தாடி.

நடராசன்:- அம்மை இடம் (இடப்பாகம்) பெற்று அமை (அமைந்துள்ள) வான் (உயர்ந்த) அரங்கு (மன்றில்) உதித்து (தரிசனம் தந்து). மெய்ம்மை – நிலையான, அழிவற்ற.

27. அம்மை அலை கங்கை – ஒலிமிக்க அலைகளை உடைய கங்கையாற்றை. தம் தாரம் ஆக்கி – தம்முடைய மனைவியாகக் கொண்டு உமை அமலைக்கு – உமாதேவியாகிய தாங்களுக்கு. அம்மை தந்தார் – கைப்பிடித்த சிவபெருமான். (27)

சத்தவிசைப் பாடலத்திற் சாரிரத மூர்ந்தொளிக்கும்
வித்தகமார் பானுஒக்கும் வெள்ளிவெற்பே-நித்தம்
வழுத்தைத் தவிரா அடியர்க்கு வேதன்
எழுத்தைத் தவிரான் இடம். 152

மலை- சத்த இசை பாடல் அத்தில் – ஏழு சுரங்களாலான பாடல்களாகிய வேதத்தில், அது பகுதிப்பொருள் விகுதி, உருபேற்றது. சார் இரதம் ஊர்ந்து ஒளிக்கும் வித்தகம் ஆர் – அமைந்த இனிமையாகவே அமைந்து அந்த வேதங்களில் பரவியிருந்தும்,அவற்றிற்கும் தெரியாமல் மறைந்திருக்கின்ற திறமை பொருந்திய.

சூரியன்:- சத்த விசை பாடலத்தில் சார் இரதம் ஊர்ந்து ஒளிக்கும் வித்தகம் ஆர் – ஏழு வேகமாகச் செல்கின்ற குதிரைகள் பூட்டப்பெற்ற தேரைச் செலுத்திக் கொண்டு உலகிற்கு ஒளியைத் தருகின்ற சாமர்த்தியம். பானு – சூரியன்.

28. நித்தம் – நாள்தோறும். வழுத்து ஐந்து அவிரா மடியார்க்கு – தன்னைத் துதிப்பதாகிய சிறப்பொடு விளங்காத சோம்பேறிகட்கு. வேதன் எழுத்தைத் தவிரான் – பிரமனால் எழுதப்பட்ட விதியை நீக்காதவனாகிய சிவபெருமானின்.

பன்னாறங் கத்தினொளிப் பாவையர்க்கின் பந்தரலின்
மின்னார் சசியையொக்கும் வெள்ளிவெற்பே-கொன்ஆர்வை
வேல்அம்கை ஏற்றான் வியன்தாதை வேதன்க
பாலம்கை ஏற்றான் பதி. 153

மலை:- பன் ஆறு அங்கத்தின் ஒளிப்பா – சொல்லப்படும் ஆறு அங்கங்களை உடைய வேதங்களால் காண இயலாதபடி ஒளிந்திருக்கும் தன்மையால். ஐயர்க்கு இன்பம் தரலின் – உயர்ந்தவர்களுக்கு வீட்டின்பத்தை வழங்குதலால்.

சந்திரன்:- பன்னாறு அங்கத்தின் ஒளி – பதினாறு கலைகளையுடைய உடலின் பிரகாசம். பாவையர்க்கு இன்பம் தரலின் – பெண்களுக்கு உவகை ஊட்டுவதால். மிள்க் சசி – ஒளி மிக்க சந்திரன்.

29. கொன்ஆர் வை வேல் அம் கை ஏற்றான் வியன் தாதை – அச்சம்பிக்க கூரிய வேலாயுதத்தைஅழகிய கரத்தில் தாங்கிய முருகப் பெருமானின் பெருமை மிக்க தந்தை. வேதன் கபால – பிரமனின் மண்டையோட்டை ஏந்திய. கை ஏற்றான் முழங்குகின்ற – இடப வாகனத்தராகிய சிவபெருமானின். பதி – தலம். கபாலக்கை எனற்பாலது மடக்கு நோக்கி மெலித்தல் விகாரம் பெற்றது.

கோவளம்கா ராமணிகள் கொள்கடலை எள்வளத்தால்
மேவரிசால் முல்லைஒக்கும் வெள்ளிவெற்பே நாவரசென்
மெய்த்தாண் டகம்புகல்சீர் வித்தகரை அன்பாழி
உய்த்தாண் டகம்புகலான் ஊர். 154

மலை:- கோ – தண்ணீர். அளம் – நெய்தல்நிலம். கார் – அச்சம், அழகு எனினும் ஆம். ஆம் மணிகள் – தன்னிடத்தில் தோன்றுகின்ற இரத்திகங்கள், கடனுக்கு இரத்தினாகரம் என்றே பெயர். கொள் – ஆகியவற்றை எல்லாம் தன்பாற்கொண்டுள்ள. கடலை எள் வளத்தால் – சமுத்திரத்தையே பரிகசிக்கின்ற அளவு வளப்பம் மிகுந்திருத்தலால்.

முல்லைநிலம்:- கோவளம் – பசுக்கூட்டம். காராமணிகள், கொள்(ளு), கடலை, எள்(ளு) ஆகிய தானியங்களின் வளப்பத்தால். மேவு அரிசால் – விரும்பப்படுகின்ற திருமால் பொருந்தியுள்ள. முல்லை – காடும் காடுசார்ந்த இடமும்.

30. நாவரசு என் மெய்த்தாண்டகம் புகல் சீர் வித்தகரை – திருநாவுக்கரசர் என வழங்கப்படுபவரும், நிலைத்துள்ள திருத்தாண்டகம் என்றும் தேவாரப் பகுதியை அருளிய பெருமை மிக்க அறிஞரை. அன்பு ஆழி உய்த்து – பக்திக் கடலில் ஆழ்வித்து. ஆண்டு – ஆட்கொண்டு. அகம்புகலான்-அவர் உள்ளத்தையே இருப்பிடமாகக் கொண்ட சிவபெருமானின். (30)

வெள்ளிவெற்புச் சிலேடைவெண்பா முற்றும்.

## 5. பஞ்ச கிரித் திருப்புகழ்

### காப்பு வெண்பா

விரித்திருப்பு நெஞ்சும்இன்பம் மீதுறத்தோய் பஞ்ச
சிரித்திருப்பு கழ்ப்பாக் கிளத்த-உரித்திருப்புள்
ஏற்றிரா மானந்த ஏந்தல்பதம் உட்புறந்தும்
தோற்றிநின்று போற்றும் துணை.

விரித்து – எண்ணங்களை விசாலப்படுத்தி. ஏந்தல் – தலைவன்.

### 1. சிவகிரி

தந்ததன தனதான தந்த - தனதானா

பங்கமல இருள்மூடி நொந்து
துன்பம்அள வறவேசுமந்த
பஞ்சைஎன எனைநீ முனிந்து விடல்ஆகா;
பைங்கண்அர வதுபூணதென்றும்
நஞ்சம்அயில் உணவாவதென்று
பண்டைஅம ரர்கள் மேனிஎன்பை அணியேதோய்
அங்கமிசை இகழாதுகொண்ட
பொங்கிளசமல் கருள்வாரிஎன்ற
அந்தஉள வறியேன்மயங்கி விடுவேனோ?
அம்பிகையி னொடுசேய்து லங்க
நந்தியிசை ஒருகால்விளங்கி
அன்படியர் புகல்ஆம் அகண்ட நிலைஈவாய்
மங்களம்மல் கியபேரையின்கண்
ஒன்றும்மகி மைகொள்மூலலிங்க
மைந்துபொலி புலன்ஆனஐந்து வடிவோனே
வந்தனைசெய் அருள்நாரதன்தை-
வந்தமக தியின் ஓதையும் பொய்
வன்பிசைஎன் இழிபாடலும்கொள் செவியோனே
திங்கள்வெயில் சுடவாடி அங்கம்
நொந்துபர தவியாதிணங்கு
சிந்தைபிரி வறுகோயில்கொண்ட குருநாதா
தெம்புபொலி அடியார்வணங்கு
கொங்குபுரி தவமே திரண்ட
தென்கயிலை மலையாகிநின்ற பெருமாளே. 155

1. பங்க - குற்றம் ஆகிய. அளவு அறவே. பஞ்சை - வறியவன். முனிந்து விடல் - வெறுத்து விடுதல். பைங்கண் - பசிய கண்களை உடைய. அரவு அது - பாம்பை, அது பகுதிப்பொருள் விகுதி. பூண் அது என்று - அணிகலன் எனவும். நஞ்சம். அயில் - உண்பதற்குரிய. உணவு ஆவது என்று. பண்டை - பழைய. அமரர்கள் - தேவர்களுடைய. என்பை - எலும்புகளை. அணியே தோய் அங்கமிகை - அழகிய உடலில், ஏகாரம் அசை. பொங்கு - பூரிக்கின்ற. இசை மல்கு - புகழ் மிக்க. அருள்வாரி - கருணைக் கடல் என்ற. அந்த உளவு அறிவேன் - இரகசியத்தை அறிந்தவனாகிய நான், வினையாலணையும் பெயர், எழுவாய். சேய் - முருகப்பெருமான். ஒருகால் - ஒரே ஒரு முறை. விளங்கி - காட்சியளித்து. அன்பு அடியர் புகல் ஆம் அகண்ட நிலை ஈவாய்.

மங்களம் மல்கிய பேரையின் கண் ஒன்றும் - சுபம் நிறைந்த திருப்பேரூரில் பொருந்தியுள்ள. மகிமை கொள் - பெருமையையுடைய. மைந்து பொலி - வலிமை, ஆற்றல் மிக்க. புலன்ஆன - காட்சிக்குப்பொருள் ஆகியுள்ள, கால வழுவமைதி. தைவந்த - தடவுகின்ற, (வீணையை) மீட்டுகின்ற. மகதியின் - நாரதரின் யாழ் மகதியாழ் எனப்படும். அதன் ஓசையும் ஒலியும். பொய் வன்பு இசை - பொய்ம்மையும் வன்முறையும் சேர்ந்துள்ளன. என் - அடியேனின். இழி பாடலும் - தரம்குறைந்த செய்யுள் களையும். திங்கள் வெயில் சுட வாடி - சந்திரனின் ஒளியாகிய நிலவு வெயிலைப் போலச் சுட்டெரிக்க மனம் கலங்கி. அங்கம் நொந்து பரதவியாது - உடல் வருந்தித் துன்பப்படாமல், அதாவது காமத்தால் நலியாதவாறு. இணங்கு சிந்தை - தேவரீர் பொருந்துவதற்கேற்ற உள்ளத்தில். பிரிவு அறு - எப்போதும் பிரியாமல். தெம்பு பொலி - ஊக்கம் மிக்க. கொங்குபுரி - கொங்குநாடு செய்த. (1)

## 2. சத்திகிரி

தனதன தான தந்த - தனதானா

அருள்உரு வாய், அகத்தி னொருபுறம் ஒர்கணத்தும்
அகில்கில தாருயிர்க்குள் உயிரேஆய்,
அலகறு காலம்உற்ற வியன்மகி மாநலத்தை
அறிகிலன் வீணில்இப்பொய் உலகூடே
மருள்நிலை ஆர்சடத்த உதவிஅ தோகதிக்கு
வழிபுகல் மாதுருக்கள் வழிபாடே
வருசுக வீடளிக்கும் எனநினை வேள்முடிக் கள்
மலர்அடி நீபதிக்க எதிர்வாராய்;

தெருள்பரி பூரணத்துள் இயல்சிவ யோகர்மெச்சு
திருவிளை யாடல்நித்தம் இசைவாழ்வே!
திகழ்பிர மாபுரத்தில் வருசுதன் ஆர்தல்உற்ற
திரள்அமு தார்குயத்தின் இணையாளே!
கெருவருள் வாடெனைக்கை கொடுசுகம் ஈயும்ஒப்பில்
கிருபைவி லோசனத்தொர் குருஆவாய்!
கிரிமகள் ஆனபெற்றி நிசம்உற நடுசத்தி
கிரிவடி வாய்நிலைத்த பெரியாளே! 156

2. அகல்கிலது - நீங்காமல். ஆர்உயிர்க்குள் உயிரே ஆய். அலகு அறு-அளவற்ற. வியன்மகிமாநலத்தை - மிக வியப்பிற்குரிய பெருமையின் சிறப்பை. அறிகிலன் - அறியாதவனாகி, முற்றெச்சம். மருளிநிலை ஆர் - மயக்கம் நிலபெற்றுள்ள. சடத்தை - உடம்பினை. அதோகதிக்கு - மிகக்கீழான நிலைக்கு. மா - விலங்காகிய துருக்கள் - செம்மறியாடுகளைக் கொன்று புரியும் பூசையே. இனி துரு, கள் என உம்மை தொகையாக்கி ஆட்டையும் கள்ளையும் வைத்துச் செய்யும் வழிபாடு எனினும் ஆம், இப்பொருளில் துருகள் எனற்பாலது வண்ணம் நோக்கி வல்லினமெய் (க்) தோன்ற நின்றது. துரு என்பது ஆடு ஆதலை, ''சிறுதலைத் துருவின் பழுப்பு உறு விளைதயிர்'' (அகம்.394:2) என்பதனால் அறியலாம். சுகவீடு-பேரின்பமாகிய முத்தி. நினைவேன் - நினைப்பவன் ஆகிய அடியேனுடைய,வினையாலணையும் பெயர். முடிக்கண் - தலையின்மீது.

தெருள் - அறிவின் தெளிவினை உடைய. பரிபூரணத்துள் - முழுமையான பரம்பொருளில். இயல் சிவயோகர் - பொருந்திச் சிவத்தோடு ஒன்றியிருப்பவராகிய யோகிகள். பிரமாபுரம் - சீகாழி. சுதன் என்பது முருகப்பெருமானின் அம்சமாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை. ஆர்தல்உற்ற - அருந்திய. குயத்தின் இணையாளே - இணைக் குயத்தாளே என மாறுக, இரு நகில்களை உடையவளே. கெருவருள் வாடு எனை - அகந்தை மிக்கவர்களின் கூட்டுறவால் வருந்துகின்ற அடியேனை. கைக்கொடு - கையேற்று, ஆட்கொண்டு. ஒப்புஇல் - நிகரற்ற. கிருபை விலோசனத்து - கருணை பொழியும் கண்களை உடைய. ஓர் ஒப்பற்ற. கிரிமகள் - மலையின் குமாரி, இமவான் மகள். பெற்றி - தன்மை. நிசம்உற - உண்மையாகும்படி.

மலைமகள் ஆனதாய் மலைவடிவெடுத்து நின்றாள் என்கிறார்.

### 3. மருதமலை

*தனனாதனத் தனதான தத்த - தனதான*

கருணாகரக் குருவாய் அநித்த
உலகூடுதித் தவமாயை இச்சை-
களில்ஓடிஎய்த் துழல் வீணருக்கும் நலமேதோய்
கதிவான் வழிப் படுஞான சித்தி
தருவான்மலைத் தொகைதோறும்ஒப்பில்
கவின்நாடகத் தகைஆர்பெருக்க அருள்நீரே
ஒருபோதும்உள்க் கருதாதமட்டி
மதியேன் இயற் றிடுதீமை முற்றும்
உளம்நாடிவிட் டுவிடேல்; ஓர்திக்கும்
அறியேன்யான்-
உமைபாகன்முத் தமிழ்மா முனிக்கும்
அருணாசலத் தவராசனுக்கும்
உரைமான்மியத் தநுபூதி அற்பு தமதீவாய்;
சுருள்ஆர்குழல்ச் சுரர்மாது துக்கம்
மிக, வேடர்மெய்த் தவமாதுள்மெச்சு
சுகபோகம்முற் றியல்ஆடல் முற்செய் முருகோனே!
தொலையாவிறல்ச் சிலைமேல்எடுத்து
வளையாஒடித் தவிர்சீதை இட்ட
தொடைசூடுபொற் புயராகவற்கு மருகோனே!
மருள்மூடுகற் பனைகோடியில்ப்பல்கு
இயல்பேனைமெய்க் கவுமார சித்தர்
மருவாதரக் குழூடமைத்த குருநாதா!
வடிவானதற் றவன்யான் எனக்கொள்-
கலிர்! நாடிஎற் பணிவீர்எனத்தண்
மருதாசலப் படிவானபத்தர் பெருமாளே! 157

3. கருணாகர - இரக்கத்திற்கு இருப்பிடமான. அநித்த - நிலையற்ற. உலகூடு உதித்து. அவ - பயனற்ற. எய்த்து உழல் - இளைத்துத் திரிகின்ற. கதி - முத்தி. வான் வழிப்படு - உயர்ந்த நெறியிலே செல்லுவதாகிய. தருவான் - அளிப்பதற்காக. மலைத்தொகை தொறும் - குன்றுகள் தோறும். கவின் - அழகிய. அருள்நீயே - வழங்குபவராகிய தாங்களே. மடடி மதியேன் - கூர்மையில்லாத அறிவினை உடைய நான், அறிவீனன். உமைபாகன் -

மாதொருபாகனாகிய சிவபெருமானுக்கும், எண்ணும்மை விரிக்க. முத்தமிழ் மாமுனிக்கும் - அகத்தியருக்கும். அருணாசலத் தவராசனுக்கும் - அருணகிரி நாதருக்கும். உரை - உபதேசித்தருளிய. மான்மியந்து அநுபூதி - பெருமை மிக்கதாகிய இறை உணர்வாகிய அற்புதம். அது ஈவாய் - அதிசயத்தைத் தருவீராக, அது பகுதிப்பொருள் விகுதி.

குழல் - கூந்தலைஉடைய. சுரர் மாது - தேவசேனை. வேடர்மெய்த் தவ மாது - வேடர்கள் உண்மையாகச் செய்த தவத்தின் பயனாகத் தோன்றிய வள்ளிநாயகி. முற்று இயல்ஆடல் - முழுமையடையுமாறு காதல் லீலைகளை முன்செய். தொலையா விறல் சிலை-அழியாத வலிமையை உடைய (ஈசனார்) வில்லினை. வளையா - வளைத்து. அவிர் - ஒளி வீசுகின்ற. இட்ட - சூட்டிய. தொடை - (மண மாலை) பொன்ப்புய - அழகிய தோள்களை உடைய. ராகவற்கு - இரகு குலத்தோன்றோலாகிய இராமபிரானுக்கு. மருள் - மயக்கம். பல்கு - மிகுகின்ற. இயல்பேனை - தன்மையை உடைய என்னை, குறிப்பு வினையாலணையும் பெயர். மருவு - சேர்ந்துள்ள. ஆதர - அன்புநிறைந்த. குழுவூடு அமைத்த. வடிவு ஆனது அற்றவன் யான் எவக் கொள்கலிர் - நான் (முருகப்பெருமான்) உருவம் இல்லாதவன் என்று ஏற்றுக் கொள்ளாதவர்களே. நாடி - வந்து அடைந்து. என் - எவ்வை. தண் - குளிர்ந்த. படிவு ஆன - வடிவம் ஆகியுள்ள. பத்தர் - அடியார்களுக்கான.

வடிவம் அற்றவர் முருகப்பெருமான் என்பதை ஏற்றுக் கொள்ளாதவர்களுக்காக அவர் மருதமலை வடிவில் உள்ளார் என்பது கருத்து.

## 4. விட்டுணு கிரி

*தனதானனத் தனதானன - தனதானா*

''இகமோடினிப் பெறுமாறியல்
பரம்மீதும்ஒப் பறுநீள்சுகம்
இடுவேன்; மதக் குழிவீழ்தரு கொடியோர்தாம்
இசைவாகத் துறைஏகலிர்;''
எனவேஅறத் துணையாய்அவிர்
இளையாள்உரத் தமைவாதல்செய் தருளாலே
அகல்வானமுத் தியின்மேலவர்
சகவாசம்உற் றிடுமாறருள்
அணியார்சகப் பெயர்மாதைநன் மனையாளா

அவமாய உலகப் பலவித்தவம்
உறவோர்கட் கிலவுதவம்
அவமேயிலைக் கெளிதோ உனை விலகேன்யான்.
மகமாயைப் பற்பலவாயிரம்
மிகவேயிணைந் துயிர்மூலவன்
மலமார் இருள்கெட நூறிடு முதல்வோனே!
மறைநாடற் கரியாய்! முதிர்
சடகோபன்செய்த் திருவாய்மொழி
மகிழ்வாசமனத் துளவோடணி மணிமார்பா!
மிகஞானச் செகத் தசைகான்மதி
இகவாதருட் சுகமான்மிய
பிரகாசமெற் கருள்வான்வரு குருநாதா!
பெருமாள் முடித் தடியார்களை
அருள்விடுறப் புலிமேல்நிமிர்
பெருமாள்முடிப் பெயரோடிசை பெருமாளே! 158

6. இகமோடு - இம்மை இன்பங்களுடன். இனி பெறுமாறு இயல். எதிர்காலத்தில் அடைவதற்குரிய. பரம் மீதும் - மறுமை இன்பங்களின் மேலும். ஒப்பு அறு. மதக்குழி வீழ்தரு - உண்மையான பக்தியோ ஞானமோ இல்லாமல் பிழைப்பிற்காக மதமாகிய பள்ளத்தில் வீழ்ந்துள்ள. தாம்-பகுதிப்பொருள் விகுதி. இசை வாசகத்துறை - சொல்லுகின்ற மொழிகளின் வழியே. செலீர் - செல்லாதீர்கள். என ஏ - என்று உபதேசித்து, ஏகாரம் அசை. அறத்துணையாய் அவிர் இளையாள் - தர்மபத்தினியாக விளங்கும் திருமகள். இவ் உலகியலில் அறம் செய்வதற்குத் துணையாக உள்ள பொருளுக்குத் தலைவியாகிய திருமகள் எனினும் ஆம். உரத்து அமைவு ஆதல்செய்து - மார்பிலே இருக்கச்செய்து. அகல் வான முத்தியின் - அகன்ற ஆகாயத்தைப் போன்ற வீட்டுப்பேற்றிற்குரிய, வான முத்தி - பரமுத்தி, சகவாசம் உற்றிடுமாறு - தொடர்பு ஏற்படும்படி. சகப்பெயர் மாதை-நிலமகளை. மனையாளா - மனைவியாக. அவம் அதை - பயனற்ற உலகியலை, அது பகுதிப்பொருள் விகுதி. எளிதோ - எளிதன்று என்றவாறு.

மகமாயை - இன்பம்போல தோற்றுகின்ற மயக்கம். பற்பல ஆயிரம் என்றது மிகுதி என்னும் பொருட்டு. இணைந்து - அயர்ந்து. உயிர் - ஆன்மாவானது. மூலவன்மலம் ஆர் இருள்கெட - வன்மூலமல ஆர் இருள் என மாறுக, கொடிய ஆணவமாகிய பெரிய இருட்டை. நூறிடு - அழிக்கின்ற. மறை - வேதங்கள். நாடற்கு அரியாய். சடகோபன்

- நம்மாழ்வார். மணத்துளவோடு - வாசனைமிக்க துளசியுடன். அணி - புனைந்து கொள்கின்ற. பிக ஓசை - குயிலின் ஒலி. தெற்கு இசை கால் - தென்றல் காற்று. மதி - சந்திரன் ஆகிய காதலைத் தூண்டும் விஷயங்கள். இகலாது - என்னொடு பகைமை கொள்ளாமல், அதாவது நான் காம வயப்படாதவாறு. அருள் சுக மான்மிய பிரகாசம் - திருவருளின்பம் ஆகிய பெருமை மிக்க ஒளியை. எற்கு அருள்வாள் - எளியேனுக்கு வழங்குவதற்காக. பெரு மால் முடித்து - அவர்களின் பெரிய விருப்பத்தை நிறைவேற்றி. நிமிர் - நிமிர்ந்து நிற்கின்ற.

## 5. பிரமகிரி

*தனத்தன தனத்த தந்தன – தனதான*

மதிக்குடை நிழற்ற மங்கையர்
குழுப்புடை செருக்கு டன்திரி
மதப்பயல் செலுத்தும் ஐங்கணை அணையாதே
மழைப்புயல் நிகர்த்தி ருண்டவிர்
பகட்டிடை பகட்டி வந்துயிர்
வதைப்பவன் எனக்கு ளம்சினம் அடையாதே
விதித்துன திசைத்தி றம்பொலி
மறைத்தலை இருக்கும் ஒண்பொருள்
விளக்கம்மெய் நிலைச்சு கம்பெற உனைநாடா
வியப்பொடு துதித்தி டும்சிறு
சுதற்கருள் செயிற்க டந்திகல்
விளைப்பவர் ஒருத்தர் உண்டுகொல் அருள்வாயே
அதிர்த்தெழு திரைப்பெ ருங்கடல்
உடுத்திசை மகட்ப யந்துடல்
அளித்தருள் அரிக்கி டும்பெரு மைஉளானே!
அளிக்குலம் முழக்கி டுஞ்சத
தசத்தள மலர்க்கண் மன்கொலு
அணித்தவர் தொழச்சி றந்தமை முதல்வோனே!
மதித்தெளி விரக்கம் இன்றிய
எனக்குநல் மகத்து வம்திகழ்
வரத்தருள் விளக்க நின்றிசை குருஆவாய்!
வரைப்பறும் உயிர்க்கு டம்புகள்
படைத்தவை தொடைக்க என்றயன்
மலைப்பெயர் படைத்தி லங்கிய பெரியோனே! 159

5. மதிக்குடை நிழற்ற – திங்களாகிய குடைநிழல்செய்ய குழுப்புடை – கூட்டத்தின் பக்கத்தில். மதபயல் – காமன். அணையாதே – பக்கத்தில் நெருங்காதபடியும், ஏகாரம் என்னும்பொருளில் வந்தது. மழைப்புயல் நிகர்த்து – மாரியைப் பொழிகின்ற மேகத்தைப் போல. இருண்டு அவிர் பகட்டிடை – இருள் நிறம் பெற்று விளங்கும் எருமைக்கடாவில். பகட்டி வந்து – அதட்டிக்கொண்டு எதிர்த்து. உயிர் வதைப்பவன் – இயமன். எனக்கு உள் அஞ்சினன் அடையாதே – என மாறுக, மனத்தில் பயந்துள்ளவன் ஆகிய என்பால் வராதவாறும், எனக்கு – வேற்றுமை மயக்கம், நான்கன் உருபு ஏழன் பொருளில் வந்தது. விதித்து – (பிரமன் ஆகிய உம்மைச்) சொல்ல வைத்து. உனது – உம்மாற் சொல்லப்பட்டதாகிய செய்யுட் கிழமை வாய்த்த. இசைத்திறம் பொலி – மறைத்தலை – வேதங்களின் உச்சியில். முடிந்த பொருளாக என்பது கருத்து. ஒண்பொருள் – பரம்பொருளைப் பற்றிய . விளக்கம் – மெய்ஞானமும். மெய்நிலைச் சுகம் பெற – அழியாமல் நிலைத்திருக்கும் இன்பத்தைப் பெறுவதற்காக. உனை நாடா – உம்மை அடைந்து. சுதற்கு – மகனைப் போன்ற எளியேனுக்கு, பிரமனால் படைக்கப் பெற்றதால் மைந்தன். அருள் செயில். கடந்து – தங்கள் செயலுக்கு மீறி. இகல் – மாறுபாடு ஒருத்தர் உண்டு கொல் – வினா எதிர்மறை.

அதிர்த்து எழு. திரை – அலைகளை உடைய. உடுத்து – புடவையாக அணிந்து கொள்ளுகின்றவளும். இசை – கொடைத்தன்மை மிக்கவளும் ஆகிய, புகழ்மிக்க எனினும் ஆம். மகட் பயந்து – நிலமகளைப் படைத்து. (பெற்றெடுத்து). உடல் அளித்தருள் அரிக்கு இடும் – உம் உடம்பைக் கொடுத்தவராகிய, உந்தித் தாமரையில் உண்டாக்கியவராகிய, திருமாலுக்குத் தருகின்ற. அளிக்குலம் – வண்டுக் கூட்டம். சத தசத்தள மலர்கக்கண் நூறுபத்துகளாகிய ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரையில். மன்கொலு – நிலைபெற்ற கொலுவிருப்பை, ஓலக்கத்தை. அணித்தவர் – தவர் அணி என மாறுக, முனிவர் கூட்டம். மதித்தெளிவு – அறிவு விளக்கமும். இரக்கம் – கருணையும். இன்றிய எனக்கு – இல்லாதவனாகிய எளியேனுக்கு. நல். மகத்துவம் – பெருமை. வரத்து – மேன்மையான. நின்று இசை – இருந்து உபதேசிக்கின்ற. வரைப்புஅறு – எல்லையற்ற. உயிர்க்கு உடம்புகள் படைத்து. தொடைக்க என்று – ஒன்றுடன் ஒன்றை இணைப்பதற்காக, உயிர்கள் உள்பொருளாக முதலிலேயே உள்ளன; அவற்றின் இருவினைகளைத் துய்ப்பதற்கேற்ற உடல்களை மட்டும் பிரமன் படைக்கிறாள். பிறகு உயிரையும் உடலையும் தொடுக்கிறான் (கோக்கிறான்). பஞ்சகிரித் திருப்புகழ் முற்றிற்று.

## 6. தனித்திருப்புகழ்கள்

### 1. விநாயகர்

*தய்யதனதத்த தானதானன – தனதானா*

தொல்லை மறைஉச்சி மீதிலேமணி
மௌலிஎனவைத்த பூரணாகர
துய்யஅடிபற்றி வாழநாடிடும் எனைநீயே
துள்ளிவிழும் அற்ப மாயமேநிறை
கள்ளமன இச்சை யோடுகூடிய
தொல்லைபெறவைக்கில் யாவரேஅருள் புரிநீரார்?
வல்லைகருணைக்கண் நாடி நீடொளி
பில்குதுவர்வெற்பென் மேனியோடிசை
மல்கும் இருசத்தி மார்குலாவஎன் விழிநேராய்
வள்ளல்மலர் மெய்ச்ச ரோசதாள் முடி
எய்த அமைவித்து ஞானபூரண
மையம் நிலைபெற்ற வாழ்வின்மேவிட விடுவாயே.
குல்லை கமழ்பொற்பு வேள்புயாசலம்
வள்ளிதனவெற்பில் மூழ்குமாறெதிர்
கொள்ளும்மதவெற்பின் மேனிதோய்தரு முதல்வோனே!
கொவ்வை இதழ்மைக்கண் மாதர்பேணிசை
அவ்வை அகவல்ச்சொல் வார்அவாவிய
கொள்கைகளைமுற்று மாறுளோகையில் அருள்வோனே!
வில்லைவிசிகத்தை ஓவிலாதுகொள்
பொய்ம்மைமதனுக்குள் வாடுறாதருள்
மெய்ம்மைநிலைஉய்க்குமு ஞானதேசிக வடிவாவாய்
வெஃகும் உயர்முத்தி வீடும் ஈதலின்
ஐயர்தருவெட்கும் ஆகராஉயர்
வெள்ளிமலைவிக்கி னேசுரா! சுரர் பெருமாளே! 160

1. தொல்லை – பழமையான. மௌலி – கிரீடம். பூரண ஆகர – முழுமைக்கு இடமான. துய்ய – தூய்மையான. தொல்லைபெற வைக்கில் – துன்பம் அடைய விடுவீராகில். நீரார் – குணத்தை உடையவர். வல்லை – விரைவில். ஒளி பில்கு – வெளிச்சம் வீசுகின்ற. துவர் வெற்பு என் – பவள மலைபோன்ற. மேனியோடு. இசை மல்கும் – புகழ் மிக்க. இரு சத்திமார் – சித்தி, புத்தி. வள்ளல் – வள்ளலே, அண்மைவிளி இயல்பாயிற்று. சரோச – தாமரை

போன்ற. தாள் – திருவடிகளை. முடி – என் தலையில். ஞானபூரண மையம் – பூரண ஞானமையம் என மாறுக, முழுமையான அறிவுமயமாகிய இடத்தில்.

குல்லை – வெட்சிமலர். கமழ் பொற்பு – மணக்கின்ற மலை ஆகிய. வேள்புய அசலம் – முருகப் பெருமானின் தோள்களாகிய குன்றுகள். தனவெற்பில் – கொங்கைகள் ஆகிய பொருப்புகளில். எதிர் கொள்ளும் – வள்ளிக்கு முன்னால் வருகின்ற. மதவெற்பின் – மதம் பொழிகின்ற மலையைப் போன்ற, யானை, வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, முன்மொழி நிலையல். கொவ்வை இதழ் வீழிக்கனியைப் போன்ற உதடுகளையும். மைக்கண் – அஞ்சனம் தீட்டப்பெற்ற விழிகளையும் பெற்ற. பேண் இசை – விரும்புகின்ற புகழை உடைய. அகவல் – விநாயகர் அகவலை. அவாவிய – விரும்பிய. முற்றுமாறு – அப்படியே நிறைவேறும்படி. உள் ஓசையில் – மனமகிழ்ச்சியோடு. விசிகத்தை – அம்புகளை. ஒவிலாது – விட்டுவிடாமல். பொய்மை – வஞ்சத்தன்மை மிக்க. மதனுக்கு – மன்மதனுக்கு. உள் வாடுறாது. உய்க்கும் – செலுத்தும். வடிவு ஆவாய். வெஃகும் – விரும்பப் படுகின்ற. ஈதலின் – வழங்குவதால். ஐயர் தருவெட்கும் – வேர்களின் மரங்களாகிய பஞ்சதருக்களும் நாணமுறச் செய்கின்ற. ஆகரா – உயர்வினை உடையவரே. சுரர் பெருமாளே – தேவ தேவனே.

## 2. முருகவேல்

*தய்யதந்தன தானனதானன தனதானா*

செய்யுபுன்சடை மேல்மதிசூடிய
கைலையங்கிரி தோய்சிவனார் அதிர்
செல்இரும்பொழில் சூழ்பொதியாசல முனிவோன்நேர்
திவ்வியம்பொலி மாதவர் ஆதர
உள்ளகம்தனில் ஆடல்குலாவிய
தெய்வமங்கள பாதசரோருகம் அடிநாயேன்
மையல்நெஞ்சக மோடிருபார்வை முன்
எய்தல்இங்கரி தாம்எனும்மான்மிய
வைபவம்தெரி வேன்அதனால்உன திடம்ஓதேன்
வைதகன்றிடு வாய்எனவேசினம்
மல்கினும்பாரி யாதகல்கானிடை
வள்ளிபின்திரி தாள்முடிமீதணி தரவாராய்

கையகன்படை வானரர் சூழ்தர
ஒல்இலங்கையின் மேவிய நீதிகொள்
கள்ளவஞ்சகன் மாயவெண்மாயவன் மருகோனே!
கள் அலம்பிய கூதளமார்பிசை
வெல்உடம்பிடி ஆய்அடல்நீடிய
கைதவன்படி வாவரும்ஓர்கலை உடையானே!
வெய்யபுன்புல வேடர்கள் ஆடலில்
நையும் என்றனை ஓர்பொருளா அருள்
வெள்ளம்பிஞ்சுகண் நாடிமெய்நாடிடு குருநாதா!
விள்ளரும்கிரி யாவிலும் ஆடல்செய்
துய்யபங்கய பாதருகா அணி
வெள்ளியங்கிரி தோய்குமராசுரர் பெருமாளே! 161

2. செய்ய – சிவந்த, மதி – பிறை. அதிர் செல் – ஒலிக்கின்ற மேகங்கள் படர்ந்த. இரும் பொழில் – பெரிய சோலைகள். பொதியாசல முனிவோன் நேர் – அகத்தியரைப் போன்ற. திவ்வியம் பொலி – தெய்வீகம் பொருந்திய. மாதவர் ஆதர – பெருந்தவசிகளின் அன்பு மிகுந்த. உள்ளகம் தனில் – மனத்தில். மங்கள – சுபமான. பாதசரோருகம் – திருவடித்தாமரை. அடிநாயேன் – நாயடியேன், மிக இழிந்த எனது. மையல் நெஞ்சகமோடு – ஆசைகள் மிகுந்துள்ள உள்ளத்தின் கண்ணும், இனி, மை அல் எனப்பிரித்து அஞ்சனத்தைப் போன்று இருண்ட எனலும் ஒன்று. அத்துச் சரியை கெட்டது. இரு பார்வை முன் – இரண்டு கண்களுக்கு எதிரிலும். இங்கு அரிது ஆம். மான்மிய வைபவம் – பெருமைமிக்க வரலாற்று மரபு, மிக இழிந்த இடத்திற்கு மிக உயர்ந்தவர்கள் வரமாட்டார்கள் என்றும் நடைமுறை மரபு. ஓதேன் – (எனக்குத் தரிசனம் வழங்கி என் உள்ளத்தில் இருக்க வேண்டும் என) வேண்டமாட்டேன். வைது – திட்டி. சினம்மல்கினும் – கோபித்துக்கொண்டாலும். அகல் கானிடை – இடம் அகன்ற காட்டில். தாள் – (தேவரீருடைய) திருவடிகள். முடிமீது அணிதர – (எளியேனின்) தலையின்மேல் சூடிக்கொள்ள.

'கை அகன்படை – அகல் கை படை என மாறுக, அகன்ற உட்பிரிவுகளை உடைய சேனை (அக்குரோணி, வெள்ளம் முதலிய படைப்பிரிவுகள் கை எனப்படும். வானரர் – (சுக்கிரீவனின் படையாகிய) குரங்குகள். நல் – விரைவில். அநீதி கொள் – (பிறன்மனைநயந்து) முறையற்ற தன்மை கொண்ட. வஞ்சகன் – ஏமாற்றிய இராவணன்.

மாற - சிறக்க. வெல் - வெற்றிபெற்ற. மாயவன் - இராமபிரான் ஆகிய திருமால். கள் அலம்பிய - தேன் துளும்புகின்ற. இலகு - பொருந்தியுள்ள. வெல் உடம்பிடி - வெற்றி வேல். அடல் நீடிய - வலிமை மிக்க. கைதவன் படிவா - (உக்கிர குமார) பாண்டியன் வடிவத்தில். கலைஅம்சம். வெய்ய - கொடிய. புல் - இழிந்த. புலவேடர்கள் - ஐம்புலன்களாகிய வேலவர்கள், உலகம். ஆடலில் - முறையற்ற செய்கைகளால். நையும் - வருந்துகின்ற. கண்நாடி - விழிகளைப் பார்த்து. மெய்நாடு இடு - நிலையான முக்தித்தலத்தில் இருத்துகின்ற. நாட்டிடு என்ற பாலது வண்ணம் நோக்கி நாடிடு என நின்றது. விள் அரும் - எத்தனை என்று கூற முடியாத. கிரியாவிலும் - குன்றுகள் அனைத்திலும். துய்ய - தூய. பங்கய பாத - தாமரைத் திருவடிகளை உடைய. அணி - அழகிய.

## 3. சிவபெருமான்

*தய்யதந்தன தானன தானன – தனதானா*

*கள்ள ஐம்புல வேடுவர் ஆவல்கள்*
*நல்கிடும்தொழிலே பெரிதாய்உழல்*
*கல்இரும்பினை நேர்மன வீணரொ டலையாதே*
*கல்வியின்பய னாநிறைபேர் அருள்*
*மெய்உணர்ந்திசை வானதபோநிலை*
*கைவரும்பெரி யோர்பதமீதுதிர் பொடிதானே*
*தள்ளரும்பவ ராசிஎலாம் எரி*
*உள் அணைந்ததுய்போல் ஒழிவாதல்செய்*
*தைவிகம்தர லாவதெனாமுடி புனையேனோ*
*சையம்என்றியல் மால்விடை மீதவிர்*
*தையல்பங்குற நாயடியேன்எதிர்*
*சைவமங்கள மான்மியசேவைநல் கிடுவாயே*
*தெள்ளரும்புகழ் வாதபுராதிபர்*
*விள்வியன்திரு வாசகம்ஆம்மறை*
*செய்யபங்கய நேர்கையினால்வரை தருகோவே*
*செல்வம் முந்திய பேரையில் நாவலர்*
*வள்ளல் வந்தனை கால்உமையோடியல்*
*செய்யுள் ஒன்றுபு பேர் அருள் ஆடல்கள் புரிவோனே*

விள்ளருந்துயர் ஆணவமாயையின்
உள் அமிழ்ந்ததய ராதெனைநீடருள்
வெள்ள அம்பக நாடியதேசிய மணிஆவாய்
வில்வம் அம்பரவார்மதி கூவிளம்
மல்கு கொன்றைய றாவணிநீடிய
வெள்ளியங்கிரி வானவனே! சிவ பெருமானே. 162

3. கள்ள - திருட்டுத்தனம் கொண்ட. ஆவல்கள் விருப்பங்கள். புலனின்பம் தேடுவதிலேயே நாட்டம் மிகுந்து என்பது கருத்து. கல் இருப்பினை நேர் - கல்லையும் இரும்பையும் போன்ற தபோநிலை - தவநிலை. கைவரும் - இயல்பாக அமைந்த, பழக்கம் ஆன. பதம்மீது உதிர்பொடி - பாததூளி, திருவடித்துகள். தள் அரும் - தவிர்க்க முடியாத. பவ ராசி எலாம் - பிறவிக் கூட்டங்கள் யாவும், எரியுள் அமைந்த துய்போல் - தீயிடைப்பட்ட தூசியைப்போன்று. ஒழிவு ஆதல் செய் - அழிக்கும். தைவிகம் தரல் ஆவது எனா - இறைத்தன்மையை அளிப்பது என அறிந்து (சத்துகளை). முடி - என் தலையில். சையம் என்று இயல் - மலையைப் போன்ற. மால்விடை - பெரிய எருது. அவிர்தையல் பங்கு உற - விளங்குகின்ற உமாதேவியார் இடப்பாதியில் பொருந்த. தென் அரும்புகழ் - சிந்தையைத் தெளிவாக்குகின்றதும், கிடைத்தற்கரிய கீர்த்தியைப் பெற்றுள்ள. வாதபுராதிபர் - மாணிக்கவாசகர். வின் - தருவாய் மலர்ந்தருளிய. வியன் - பெருமை மிக்க. செய்ய - சிவந்த. நேர் - போன்ற. செல்வம் முந்திய - வளப்பத்தால் முதன்மை பெற்றுள்ள. பேரையில் - திருப்பேருருக்கு. நாவலர்வள்ளல் வந்தணை கால் - சுந்தரர் வந்தடைந்தபோது. செய்உள் ஒன்றுபு - வயலில் பொருந்தி. நாவலர்கோன் வந்தபோது செய்யுள் ஒன்றினார் என்பது நயம். விள்ளரும் - கூறமுடியாத. அயராது - சோர்வடையாமல். அருள் வெள்ள அம்பகம் - கருணைமிக் கண்களால். நாடிய - பார்த்த. தேசிகமணி - குருநாதர். வில்வம் - கூவிளம். அம்பு - நீர். அரவு - பாம்பு. ஆர் - ஆத்தி. மதி - திங்கள். காமரம் - ஆலமரம். மல்கு - நிறையும். அறா - ஆகியவை நீங்காத. அணிபொருந்திய - அழகு மிக்க. இலகு கூறப்பெற்றவை யாவும் சிவபெருமானின் வடிவத்தைவிட்டு நீங்காதன ஆகும். ஆலமரம் பலருக்கு நிழலளிப்பது. வானவனே - தேவனே.

## வாழி விருத்தம்

(எண்சீர்க் கழிநெடிலடி விருத்தம்)

அணிதிகழ்தென் கயிலைவெள்ளி அசலம் வாழி!
ஆலயம்கொள் வேழமுக அமலன் வாழி!
பணிபுரிமெய் அன்படியார் பலரும் வாழி!
பற்பம்அக்கம் ஆதியசீர் பரந்து வாழி!
தணிவில்மறை யோர்முதல்ச்சற் சனர்கள் வாழி!
தவம், புலமை, கற்பினர், ஆன் தழைத்து வாழி!
மணிமுகில்பெய் தின்பம்எங்கும் மல்கி வாழி!
மங்களம்உற் றுலகம்எல்லாம் வாழி! வாழி!

அசலம் - மலை. அமலன் - இயல்பாகவே குற்றங்களினின்று நீங்கியவரான இறைவன். பற்பம் - திருநீறு. அக்கம் - உருத்திராக்கம். பரந்து - உலகமக்களிடையில் பரவி. தணிவு இல் - இழிந்த தன்மை இல்லாதவர்களாகிய. சற்சனர்கள் - நல்லோர். ஆண் - பசுக்கள். மணிமுகில் - நீலமணியைப்போன்ற மேகங்கள். பெய்து - மழை பொழிந்து. மல்கி - நிறைந்து. மங்களம் - சுபம்.

சிரவையாதீன கர்த்தர்

தவத்திரு. கந்தசாமிசுவாமிகள் இயற்றியருளிய
**வெள்ளியங்கிரிச் சிற்றிலக்கியங்கள்**

மூலமும்

சிரவையாதீனக் கவிஞர்

புலவர் ப.வெ. நாகராசன் அவர்கள் எழுதிய
உரையும்

முற்றிற்று.

# பிழைத்திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| X | 32 | என்றும் | என்னும் |
| | 33 | காப்பினும் | காப்பிலும் |
| XI | 21 | என்றும் | என்னும் |
| XII | 3 | என்றும் | என்னும் |
| XIII | 12 | தவச் சிறப்பு | தலச் சிறப்பு |
| | 13 | பொழிச் சுரும்பும் | பொழிற்சுரும்பும் |
| | 25 | படலங்களிலும் | படலங்களில் |
| XIV | 3 | ஆண | ஆன |
| | 6 | வண்ணக்குறிப்பு | வண்ணக்குழிப்பு |
| XV | 13 | எடுத்தன | எழுந்தன |
| 1 | 2 | விநாயகர் மூர்த்தி | விநாயக மூர்த்தி |
| 2 | 13 | இற்சுகோததி | சிற்சுகோததி |
| | 25 | ருஞ்சரத் திரள் | குஞ்சரத்திரள் |
| 3 | 5 | விம்பித | விம்மித |
| | 29 | என்றழி | என்புழி |
| 5 | 8 | சுரணே | சுரனே |
| | 31 | செய்வதை | செல்வதை |
| 6 | 10 | எச்சங்கட்டும் | எச்சங்கட்கும் |
| | 21 | மரிக்கும் | மறிக்கும் |
| | 23 | அற்புக் | அற்புதக் |
| | 26 | தண்டலாம் | தண்உலாம் |
| 7 | 7 | பதிவிதாது | பதிவித்து |
| | 8 | எனக்குள் | எனக்குன் |
| 8 | 13 | வீண்ஆர் | விண்ஆர் |
| | 26 | காரியைகள் | சாரியைகள் |
| | 31 | தீ | நீ |
| 9 | 2 | சோநித்திடல் | சோதித்திடல் |
| | 10 | உன் | உள் |
| 11 | 6 | என்னும் | என்றும் |
| | 10 | நாள்கண் | நான்கன் |
| 12 | 1 | சத்தியநாயக | சத்திநாயக |
| 13 | 3 | துதி | கதி |
| 14 | 7 | பரித்தடரு | பரித்த உரு |
| | 8 | மெதிது | மெத்து |
| | 12 | கமரில்ர்ப் | கமரில்ப் |
| | 27 | மெய்தழுவி | மெய் தழுவிட |
| 15 | 14 | என்றும்மை | எண்ணும்மை |
| | 16 | இரத்தணிந்து | சிரத்தணிந்து |
| | 23 | அழிகய | அழகிய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 4 | ஈய்வே | ஈயவே |
| | 12 | என்றும் | என்னும் |
| | 30 | செழிக்க | செழித்த |
| | 30 | முகற்கஞ்சுகம் | முகிற்கஞ்சுகம் |
| | 32 | வீழ்ந்தர | வீழ்தர |
| 18 | 1 | உடம்பெல்லாம் | உடம்பெலாம் |
| | 20 | சரம்கொய் | சிரம்கொய் |
| | 24 | விரிந்தென் | விரிந்ததென் |
| | 25 | சந்தி | சத்தி |
| | 27 | இனத்துடன் | சினத்துடன் |
| 19 | 9 | தீர்ந்து | தீர்த்து |
| | 11 | கார்த்திரத் | கார்த்திரள் |
| 21 | 1 | உயிரும் | உயிராம் |
| | 19 | விதத்தி | விதத்த |
| | 22 | அமைந்திடும் | அமைத்திடும் |
| | 26,29 | சதக்குத் | சதக்ருத் |
| | 27 | சாற்றிலும் | சாற்றினும் |
| 22 | 7 | வழுந்து | வழுத்து |
| | 13 | இருபதற்கான | இருப்பதற்கான |
| | 27 | பணி | பனி |
| | 29 | காண் | கான் |
| 23 | 2 | கையராய் | கையரால் |
| | 4 | தொழு | தொழ |
| | 12 | உத்தரத்திரனுலும் | உத்தரத்திலும் |
| | 14 | உத்தராயணம் | உத்தராயனம் |
| | 29 | இப்பொருள் | இல்பொருள் |
| 24 | 9 | கமுரு | கமுகு |
| | 28 | காட்சியனித்து | காட்சியளித்து |
| 25 | 13 | அருந்தாபத்தி | அருத்தாபத்தி |
| | 14 | அறியாமையாகி | அறியாமையாகிய |
| | 21 | முந்தி | முத்தி |
| | 28 | சங்கம்மத்துள் | சங்கமத்துள் |
| | 31 | நினைப்படும் | நினைப்பரும் |
| | 34 | திருக்கழுல | திருக்கழுமல |
| 26 | 3 | தீர்க் சந்தி | தீர்க்க சந்தி |
| | 12 | மகனை | மகளை |
| | 18 | சேர்ந்தவன் | சேர்ந்தவள் |
| | 31 | நாண்கள் | நான்கன் |
| 27 | 2 | அவ்வழி | அல்வழி |
| | 19 | உள்க் | உயிர்க் |
| | 22 | என்றும் | என்னும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 27 | 28 | புண்புழு | புன்புழு |
| | 29 | துழல்வேண் | துழல்வேன் |
| 28 | 2 | வினையாலனையும் | வினையாலணையும் |
| | 25 | ஊனர் | ஊனக் |
| | 34 | வித்திகா | வித்தகா |
| 29 | 8 | திருவிழியால் | தருவிழியால் |
| | 14 | பேராளியை | பேரொளியை |
| | 22 | இரமேல் | சிரமேல் |
| | 32 | விககித | விகசித |
| 30 | 22 | கூவிளத் திரு | கூவிளத் தரு |
| | 30 | நாரதன் வழிபாடு | நாரதன் வழிபடு |
| 31 | 6 | தாவகை | தாரகை |
| | 20 | குரல் சொல் | குரல்கொல் |
| 32 | 3 | உணர்ந்தும் | உணர்த்தும் |
| | 15 | வழிபாடு | வழிபடு |
| | 24 | உன் | உள் |
| | 34 | ஆர் | சூர் |
| 33 | 9 | முளிரியால் | முளரியால் |
| | 21, 27 | அஃறினை | அஃறிணை |
| | 24 | மின் ஆவிர் | மின்அவிர் |
| 34 | 7 | துறந்து | துரத்து |
| | 28 | என்றும் | என்னும் |
| | | என்னடையை | எண்ணடையை |
| | 29 | வெளிப்பட | வெளிப்படை |
| 35 | 20 | மனப்பந்தர் | மணப்பந்தர் |
| 36 | 2 | தோரையை | தேரையை |
| 37 | 6 | வறுமை அடைந்த | வறுமையர் என்ற |
| | 10 | கணப்புல்ல | கணம்புல்ல |
| | 19 | விருந்தன் | விருத்தன் |
| 39 | 2 | சிவபுறச் | சிவபுரச் |
| 41 | 7 | தமியோன் | தமியேன் |
| | 30 | தற்குரியபேற்றஅணி | தற்குறிப்பேற்ற அணி |
| 42 | 5 | இன்னம | இன்னம் |
| | 10 | சந்திரன் | இந்திரன் |
| | 14 | கரிய நிறப் | கரிய நிறம் |
| | 30 | நிலத்தை பிட | நிலத்தை விட |
| | 32 | உருந்து | உகுத்து |
| | 34 | அம்புல | ஐம்புல |
| 43 | 3 | மலர்கள் | மரங்கள் |
| | 19 | பாவல்களிலிருந்து | பாவங்களிலிருந்து |
| 44 | 25 | தல்க | நல்க |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 44 | 28 | என்றும் | என்னும் |
| | 31 | கனிவண்டின் | களிவண்டின் |
| | 32 | பிறந்துற | பிறந்துள |
| 45 | 3 | நரினும் | தரினும் |
| | 11 | என்றும் | என்னும் |
| | 23 | உரை | உணர |
| 46 | 1 | ஞானாந்தம் | ஞானானந்தம் |
| | 36 | அழிந்து | அழித்து |
| 47 | 33 | வினையாலனையும் | வினையாலணையும் |
| 48 | 9 | வினையாலனையும் | வினையாலணையும் |
| | 12 | என்றழி | என்புழி |
| | 13 | அருளைத் தேவர் | அருளத் தேவரீர் |
| | 14 | நிரல் திரை | நிரல் நிறை |
| 48 | 32 | புறம் | புரம் |
| | 34 | ஆஇயது | ஆகியது |
| 49 | 8 | என்றும் | என்னும் |
| | 20 | அலைவார் கட்டு | அலைவார்கட்கு |
| | 21 | பொரள் | பொருள் |
| | 32 | நூல்இளம் | நூல் இனம் |
| | 33 | வாழ்புவன் | வாழ்வன் |
| 50 | 2 | போல | போலி |
| | 4 | நஞ்சணைய | நஞ்சனைய |
| | 10 | காட்டிக் | காட்டித் |
| 51 | 2 | சிவயோக சாரம் | சிவபோக சாரம் |
| | 4 | முதுகும் | முதிரும் |
| | 6 | அமைவுற்றறிடாமல் | அமைவுற்றிடாமல் |
| | 13 | கொள்ளிய | கொள்ளியி |
| 52 | 8 | சிறியவல் | சிறியவர் |
| 53 | 3 | பாற்சுரன் | பாற்கரன் |
| | 3 | பாராய் | பத்தர் |
| | 10 | அணைய | அனைய |
| | 14 | பொருந்துகின்ற | பொருத்துகின்ற |
| | 16 | கழழ் | கழல் |
| | 27 | உருப்ப | உகுப்ப |
| | 33 | விளங்க | விளங்கு |
| 54 | 3 | மெய்ஞ்ஞனப் | மெய்ஞ்ஞானப் |
| | 10 | வடி வளமயில் | வடி வமையில் |
| | 11 | கெடுபவர் | கெடுவர் |
| | 21 | என்றும் | என்னும் |
| | 33 | அனங்கள் | அனங்கன் |
| 55 | 1 | அருச்சிருக்கும் | அருச்சிக்கும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 58 | 4 | பொருத்தியுள்ள | பொருந்தியுள்ள |
| | 6 | வைசம் | சைவம் |
| | 10 | தூங்க | தூங்கு |
| | 13 | நம்பவர் | ஒப்பவர் |
| | 14 | தன்கயிலை | தெண்கயிலை |
| | 19 | நின்றிறைவில் | நின்நிறைவில் |
| 58 | 22 | ஆண் | ஆன் |
| | 22 | ஆனால் | ஆனாய |
| 59 | 2 | கருத்துகள் | கருத்துள் |
| 60 | 14 | மெச்சுறள் | மெச்சுநள் |
| | 21 | என | அன |
| | 27 | தவத்தளில் | தவத்தினில் |
| | 32 | கிழிந்த | இழிந்த |
| 61 | 7, 10 | என்றும் | என்னும் |
| | 15 | கொள்க | கொண்ட |
| | 19 | நச்சுரறழ் | நச்சுறழ் |
| 62 | 10 | இறாவது | இறவாது |
| | 12 | வேத்திரட் | வேத்திரம் |
| | 20 | மூன்னுரை | முன்னுரை |
| | 23 | என்றும் | என்னும் |
| | 31 | காளத்திடப் | காளத்திப் |
| 63 | 14 | என்றழி | என்புழி |
| 64 | 9 | ஆணை | ஆனை |
| 65 | 3 | எரிந்தது | எரித்தது |
| | 8, 22 | ஏவு | ஏவும் |
| | 15, 19 | பொருத்தப் பெற்று | பொருந்தப் பெற்று |
| | 16 | மௌவன | யௌவன |
| | 27 | ஆகும் | ஆரும் |
| 66 | 14 | என்ற பாலது | எனற்பாலது |
| | 17 | கருதிகின்ற | கருதுகின்ற |
| | 27 | மாறு | மாறுமிகப் |
| | 28 | நகையால் | நகையதனால் |
| | 33 | ஓதிக்கொண்டே | ஏறிக்கொண்டே |
| 67 | 5 | நகையால் | நகையதனால் |
| | 11 | யான்வான் | யாள்வான் |
| | 29 | இழிந்து | இழித்து |
| 68 | 9 | நன்றி | ஒன்றி |
| | 11 | தன்பார்க் | தன்பால்க் |
| 69 | 2 | அழிந்து | அழித்து |
| | 2 | நீற்றுவர் | நீற்றுவார் |
| | 6 | நந்தரக்கி | நத்தரக்கி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 69 | 33 | அருந்தியமாக | அருக்கியமாக |
| 70 | 7 | வேணற்கை | வேனற்கை |
| | 24 | மொய்த்த | மெய்த்த |
| 71 | 29 | விழிப்பழத்தை | வீழிப்பழத்தை |
| 72 | 12 | வேடுவரங்க | வேடுவரங் |
| | 14 | கொண்டாள் | கொண்டான் |
| | 18 | ஒடுவ | ஒருவ |
| | 29 | என்றும் | என்னும் |
| | 30 | இப்பெருமானின் | சிவபெருமானின் |
| | 31 | வகிப்பிடம் | வசிப்பிடம் |
| 73 | 15 | கோடீரத்தளக | கோடீரத்தகை |
| | 21 | வாழ்ந்த | பொழிந்த |
| 74 | 8 | இடது நிலை | இடது பாதியை |
| | 9 | என்றும் | என்னும் |
| | 15 | மாண் மிக்க | மாண் இக்க |
| | 16 | அகத்தி | அகத்தில் |
| | 23 | என்றும் | எனினும் |
| | 24 | யாகும் | யாரும் |
| | 27 | மோனங்கையர் | மானங்கையர் |
| | 28 | மேவழிகால் | மேவழகால் |
| 75 | 7 | எடுத்த | எழுந்த |
| | 18 | நந்து | நத்து |
| | 23 | துண்டடித்த | துண்டித்த |
| 76 | 2 | இதழ்த்தென் | இதழ்த்தேன் |
| | 4 | இகந்து | இகத்து |
| | 7 | சிவனடியில் | சிவகதியில் |
| | 10, 11 | மசரம் | மசகம் |
| | 13 | கட்டம் | ஆட்டம் |
| | 16 | உமாசனை | உபாசனை |
| | 16 | உன் | உள் |
| | 17 | திருவருடிகளை | திருவடிகளை |
| | 18 | நற்றானை | நற்றாளை |
| | 20 | எழிசனர்கள் | இழிசனர்கள் |
| 76 | 21 | உலகல்களுக்கும் | உலகங்களுக்கும் |
| | 24 | அமுசுற்ற | அமுதற்ற |
| | 28 | உண்டாக்கிய | உண்டாக்கி |
| | | அமை மேல் | அமை மேல் |
| | 29 | பொருத்தி | பொருந்தி |
| | 31 | அகவப் | அகலப் |
| 77 | 1 | அழுது | அமுது |
| | 6, 14 | அம்மை | சும்மை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 77 | 10 | வாளரம் | வானரம் |
| | 16 | தாங்களுக்கு | தூயவளுக்கு |
| | 17 | அம்மை | அம்கை |
| | 31 | ஐந்து | ஐத்து |
| | 31 | மடியார்க்கு | மடியர்க்கு |
| 78 | 11 | மிள்க் | மின் ஆர் |
| | 12 | பிக்க | மிக்க |
| | 24 | இரத்திகங்கள் | இரத்தினங்கள் |
| | 24 | கடனுக்கு | கடலுக்கு |
| | 32 | என்றும் | என்னும் |
| 79 | 4 | சிரித் திருப்புகழ் | கிரித் திருப்புகழ் |
| | 17 | பொங்கிளச | பொங்கிசை |
| 80 | 18 | ஓசையும் | ஓதையும் |
| | 19 | சேர்ந்துள்ளன | சேர்ந்துள்ள |
| | 30 | அகில் | அகல் |
| | 33 | சடத்த | சடத்தை |
| 81 | 12 | மருளி நிலை ஆர் | மருள்நிலை ஆர் |
| | 12 | நிலபெற்றுள்ள | நிலைபெற்றுள்ள |
| | 15 | உம்மை தொகையாக்கி | உம்மைத்தொகை யாக்கி |
| | 26 | என்பது | என்றது |
| | 35 | ஆனதாய் லை | ஆனதால் மலை |
| 82 | 27 | அறிந்த | அநித்த |
| | 32 | மடடி | மட்டி |
| 83 | 4 | மான்மியந்து | மான்மியத்து |
| | 14 | தோன்றோலாகிய | தோன்றலாகிய |
| | 31 | இசைவாகத் | இசைவாசகத் |
| 84 | 6 | நூறிரு | நூறிடு |
| | 9 | மனத்துளவோ | மணத்துளவோ |
| | 10 | மிக | பிக |
| | 10 | தெற்தசை | தெற்கிசை |
| | 16 | இகமோது | இகமோடு |
| | 23 | அறந்துணையாய் | அறத்துணையாய் |
| | 33 | இணைந்து | இளைத்து |
| | 33 | உயர் | உயிர் |
| | 35 | ஆணமாகிய | ஆணவமாகிய |
| 85 | 7 | அருள்வாள் | அருள்வான் |
| 86 | 3 | என்னும்பொருளில் | எண்ணுப் பொருளில் |
| | 7 | எனக்கு உள் அஞ்சினன் அடையாதே | உள் அஞ்சினன் எனக்கு அடையாதே |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 86 | 12 | வாய்த்த | வாய்ந்த |
| | 26 | மலர்கக்கண் | மலர்க்கண் |
| | 37 | படைக்கிறாள் | படைக்கிறான் |
| 87 | 24 | உய்க்குமு | உய்க்கும் |
| 88 | 14 | ஓசையில் | ஓகையில் |
| | 19 | வேர்களின் | தேவர்களின் |
| | 22 | முருகவேல் | முருகவேள் |
| | 24 | செய்யு | செய்ய |
| | 34 | பாரியாதகல் | பிரியாதகல் |
| 89 | 3 | வெண் | வெல் |
| | 9 | பிஞ்சு | மிஞ்சு |
| | 11 | ருகா | குகா |
| | 24 | என்றும் | என்னும் |
| | 34 | நல் | ஒல் |
| | 34 | நயந்து | நயந்த |
| 90 | 1 | சிறக்க | இறக்க |
| | 6 | வேலவர்கள் | வேடுவர்கள் |
| | 9 | என்றபாலது | எனற்பாலது |
| 91 | 2 | அமிழ்ந்ததயரா | அமிழ்ந்தயரா |
| | 9 | இருப்பினை | இரும்பினை |
| | 15 | சத்துகளை | அத் துகளை |
| | 18 | தென் | தெள் |
| | 20 | வின் – தருவாய் | விள் – திருவாய் |
| | 25 | என்பது | என்றது |
| | 27 | கருணை மிக் | கருணை மிக்க |
| | 31 | இலகு | இங்கு |
| | 32 | பலருக்கு | அவருக்கு |
| 92 | 14 | ஆண் | ஆன் |

